4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண். எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10 மதுரை 15-6-72 வியாழன் மலர் 140

## அமெரிக்காவை கண்டித்து சீன வெளி நடப்பு

ஸ்டாக்ஹோம் ஜூன் 13—

இங்கு ஐ. நா. வின் சார்பில உலக நாடுகளின் சுற்றுச் சார்புகளைச் சுத்தமாக வைத்திருப்பது பற்றி பரிசீலனை செய்ய 114 நாடுகள் பங்கு கொண்ட ஒரு மாநாடு நடந்தது.

உலகத்தின் சுற்று சார்புகளையும்-குறிப்பாக வியட்நாமின் சுற்றுச்சார்பை நாசப்படுத்தி தனது ஆசுகிரமிப்பு நோக்கங்களுக்காக அதை அமெரிக்க சர்வநாசம்புரிந்து வருகிறது என்று இதில்கலந்து கொண்ட சீன, குற்றம் சாட்டியது.

இதற்கு நேராகப் பதில் கூற முடியாது. அமெரிக்கப்பிரதிநிதி தெற்கு வியட்னும் கைப்பாவை அரசின் பிரதிநிதி ஒருவரை உசிப்பிவிட்டு கூச்சல்போட வைத்தார். அதன் பிறகு, அம் மாநாட்டிலிருந்தே சீனப் பிரதிநிதிகள் வெளியேறிவிட்டனர்,

## சிறையிலிருந்து தப்பினர்

கொழும்பு ஜூன் 13—

இரு தினங்களுக்கு முன் இலங்கையில் சிறையில் அடைத்து வைக்கப்பட்டிருந்த 29 வாலிபர்கள் 400 மீட்டர் நீளம் பூமிக்குள் சுரங்கம் வைத்து தப்பி விட்ட செய்தி வந்தது தெரிந்ததே.

இதைத் தொடர்ந்து இன்று, 33 இளம் கைதிகள் சிறை அதிகாரிகளை மடக்கிப் போட்டுவிட்டு தப்பித்து விட்டனர் என்ற செய்தி வந்துள்ளது. இவர்கள் அனைவரும் ஸ்ரீமாவோபண்டாரநாயகா அரசாங்கத்தினல், கலகக் குற்றம் சாட்டப்பட்டு, மிருகத்தனமான அடக்குமுறைக்கு உள்ளாக்கப்பட்டு சித்திரவதை செய்யப்பட்டவர்களாகும்.

### சட்டத்தை மீறிய நிலப்பிரபுக்களை

# தண்டிக்காதது ஏன்?

## நீதிமன்றத்தில் ஏ.கே.கோபாலன்கேள்வி

திருவனந்தபுரம், ஜூன். 13—

மே மாதம் 22-ம் நாள் முதல் கேரளத்தில் நில மீட்புப் போராட்டம் நடைபெற்று வருவது தெரிந்ததே. திருவனந்தபுரத்தில் தோழர் ஏ. கே. கோபாலன் தலைமையில் 27 தொண்டர்கள் திருவனந்தபுரம் மகாராஜவுக்குச் சொந்தமான உபரி நிலத்தைக் கைப்பற்றினர். இவர்களைப் போலீசார் கைது செய்து, கோர்ட்டுக்குக் கொண்டு வந்தனர். கோர்ட், ஏ. கே. கோபாலனை மட்டும் ஜாமீனில் விடுதலை செய்து, ஏனைய தொண்டர்களை ரிமாண்ட் செய்தது.

இதைத் தோழர் ஏ. கே. கோபால்ன் கண்டித்தார். தம்முடன் ஏனைய தோழர்களையும் விடுதலை செய்ய வேண்டும், என்று கூறி கோர்ட்டில் அவர் 'தர்ணு' (உண்ணாவிரம்) இருந்தார். உண்ணாவிரதம் இருந்ததற்காக கோர்ட், அவர் மீது வழக்குப் போட்டது. இந்த வழக்கில் தனக்காக தோழர் ஏ. கே. ஜியே வாதாடினார். அதுவருமாறு:

**ஏ.கே. கோபாலன்:**

நிலச்சீர்திருத்தச் சட்டத்தை நிறைவேற்றி 2 ஆண்டுகள் ஆகின்றன. ஆயினும், இதனை அமுலாக்க அரசு தயாராக இல்லை. இரண்டு ஆண்டுகளாக மக்கள் காத்திருந்தனர். தாங்கள்போராடினல்தான் எந்தவொரு முற்போக்குச் சட்டத்தையும் அமுலாக்க முடியும் என்பதை மக்கள் புரிந்துகொண்டார்கள்.

உபரி நிலங்களை எடுத்து தங்களுக்கு அரசு விநியோகிக்கும என்று மக்கள் காத்திருந்தனர். ஆனல் அரசு அவ்வாறு செய்யவில்லை. ஆகவேதான், நாங்கள் இந்தப் போராட்டத்தில் இறங்கினேம். நிலச்சீர்திருத்தச் சட்டத்தில் கூறியிருப்பது போல

**உபரி நிலங்களை ஒப்படைக்காதஒரு நிலப் பிரபுவைக் கூட இந்த அரசு இந்நாள் வரையும் தண்டிக்க வில்லை.**

அதற்குமாருக, உபரி நிலங்களைக் கைப்பற்றி விநியோகிக்க வேண்டுமென்று கோரிய எத்தனை யும் ஏனைய தோழர்களையும் கைது செய்து, அரசு காவலில் வைத்திருக்கிறது.

**பலாத்காரம்**

என்னை, போலீஸ் கைது செய்ததாகவோ, எதற்காக என்னைக் கோர்ட்டுக்கு கொண்டு வந்திருக்கிறார்கள் என்பதுபற்றியோ எனக்குத் தெரிவிக்கப்படவில்லை. என்னைப் பலாத்காரமாகக் கோர்ட்டுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். சட்டத்தை உருவாக்குவதற்கும் மாற்றுவதற்கும் அதிகாரமுள்ள நாடாளுமன்றத்தின் உறுப்பினர்களில் ஒருவன் நான். அப்படி இருந்தும் நான் ஏன் கைது செய்யப்பட்டேன் என்பது பற்றி எனக்குக் காரணம் தெரிவிக்கப்படவில்லை.

42 வருடங்களுக்கு முன்னல் நாட்டின் விடுதலைக்காகநான்போராடியபோது அன்றைய பிரிட்டிஷ் அரசு இதே சட்டத்தைப் பயன்படுத்தி என்னைக் கைது செய்தது

நாடு சுதந்திரம் பெற்று 25 ஆண்டுகள் சென்ற பின்னும் அதே சட்டத்தைப் பயன்படுத்தி என்னை இப்போது கைது செய்திருக்கிறார்கள்.

**சர்வ ரோக நிவாரணி**

38(2)வது ஷரத்தை சர்வ ரோக நிவாரணி போன்று போலீசார் பயன்படுத்துகின்றனர். என்ன குற்றம் செய்தாலும் இதே ஷரத்தைப் பயன்படுத்துகின்றனர். தண்டனைக்கு நான் அஞ்சவில்லை. ஆனல் பகிரங்கமாக சட்டத்தை மீறிய நிலப்பிரபுக்கள் மீது இதுவரை எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. ஆனல் நிறைவேற்றப்பட்ட சட்டத்தை அமுலாக்க வேண்டுமென கோரிய என்னையும் ஏனைய தோழர்களையும் சிறையில் வைத்திருக்கிருர்கள். உபரி நிலங்களை ஒப்படைக்க வேண்டிய மகாராஜாவையும் நிலப்பிரபுக்களையும் இந்த அரசு விட்டுவைத்திருக்கிறது. இது என்ன நீதி'—என்று தோழர் ஏ. கே. கோபாலன் வாதாடினர்

## முதலமைச்சர் வீட்டு முன்பு மறியல்

ஐதராபாத், ஜூன். 14—

சம்பள உயர்வு கோரி ஆந்திர முதலமைச்சர் இல்லம முன்பு 200-க்கு மேற்பட்ட தொழிலாளர்கள் மறியல் நடத்தினர்கள்.

மாநிலப் போக்குவரத்தைச் சேர்ந்த இத்தொழிலாளர்கள் ஒருநாள் முழுவதும் மறியல் செய்தனர்.

விளக்கம். 1) கேரள ஐ. என். டி. யூ. சி. காங்கிரஸ் தலைவர் ஸ்டீபன், கேரள ஐக்கிய முன்னணியைச் சீர்குலைப்பது வலது கம்யூனிஸ்ட்தான் என்று டி. வி. தாமஸ் இருக்கும் இடத்தில் நிச்சயம் கலகம் ஏற்படுமென்றும் பேசினர். — செய்தி

2) மத்தியப் பிரதேச முதலமைச்சர் திருவாளர் சேத்தி, வலது கம்யூனிஸ்டுகள் 'இரட்டைக்குரல் சந்தர்ப்பவாதிகள்' என்று குற்றம் சாட்டினர். — செய்தி

3) மாநிலங்களவையில் "அரசாங்கச் சார்புடைய எங்களைவிட, தான் அரசாங்கத்துடன்— மிக நெருங்கியிருப்பதாக பூப்வேஷ்குப்தா உரிமை கொண்டாட வேண்டா"மென்று காங்கிரஸ் மெம்பர் சந்திரசேகரன் கூறினர். வலது கம்யூனிஸ்டுகளை காங்கிரசிலிருந்து வெளியேற்ற வேண்டுமென்றும் அவர் கட்டுரை தீட்டியுள்ளார். — செய்தி

4) தமக்குள் (காங்கிரசுக்கும் வலது கம்யூனிஸ்டுக்கும்) ஏற்பட்டுள்ள சர்ச்சைகளை பேசித் தீர்த்துக்கொள்ளவேண்டுமென்று வலது கம்யூனிஸ்டு ஏடு காங்கிரஸ் தலைமையிடம் மன்ருடியுள்ளது. — செய்தி

# ஒதுக்கப்பட்ட தொகை செலவிடப்படவில்லை

## மத்திய அரசின் ஏமாற்றுவித்தை

புதுடில்லி, ஜூன். 12

**கிராமப்புறங்களிலும், நகர்ப்புறங்களிலும் வேலை வாய்ப்புகளைப் பெருக்குவதற்காகத் தீட்டப்பட்ட மத்திய அரசுத் திட்டங்கள் அலட்சியப் படுத்தப்பட்டு போதிய அக்கறை காட்டப்படாமல் அரைகுறையாக விடப்பட்டுள்ளன. இவைகளுக்கு ஒதுக்கப்பட்ட தொகைகளும் செலவிடப்படவில்லை.**

தற்போது கிடைத்துள்ள அதிகாரப்பூர்வமான தகவல்களிலிருந்து இது தெரிய வருகிறது.

கிராமப் பணித் திட்டம் என்ற பெயரில் 54 வறட்சியான மாவட்டங்களில் இது துவக்கப்பட்டது. ஆனல் எவ்வித முன்னேற்றமும் காணவில்லை. அந்தந்தப் பகுதிகளில் உள்ள தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்புகளை அளித்து விவசாய உற்பத்திக்கு ஒரு இடைக்காலக் கட்டுக்கோப்பை உருவாக்குவதே இதன் நோக்கம் என்று கூறப்பட்டது. ஆனல் இது நிறைவேறவில்லை. மொத்தம் இதற்கு ஒதுக்கப்பட்ட தொகை ரூ 70 கோடிகளாகும்.

**சிறு விவசாயிகள் வளர்ச்சிக்கு**

மற்றொரு முக்கியமான திட்டம் சிறு விவசாயிகள் வளர்ச்சிக்கான கேந்திரங்களை நிறுவுவது ஆகும். மொத்தம் 46 கேந்திரங்களை நிறுவுவதாக இருந்தது. ஒவ்வொரு கேந்திரத்திலும் எறத்தாழ 50 ஆயிரம் திறமைபடைத்த விவசாயிகளை உருவாக்க இருந்தது. இதற்காக அவர்களுக்கு கடனுதவி தரும தகவும் தீவிர விவசாய வளர்ச்சிக்கான வசதிகளை செய்து தருவது என்றும திட்டமிடப்பட்டது ஆனல் திட்டம் நிறைவேறவில்லை.

மொத்தம் 4வது திட்டத்தில் இதற்காக ஒதுக்கப்பட்ட தொகை ரூ, 67 5 கோடி. 1970-71, 1971-72 வருடங்களில் செலவிடப்பட்டதோ ரூ 1. 39தான்.

**நடுத்தர விவசாயிகள்**

நடுத்தரவிவசாயிகள் திட்டம் 41 கிராமப்பகுதிகளில் மேற்கொள்ள முடிவு செய்யப்பட்டிருக்கிறது இதனல் ஒவ்வொரு பகுதியிலும் இருந்து 20000 விவசாயிகள் பயன் பெறுவர் என்று கூறப்படுகிறது. ரூ. 47.5 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது ஆனல்செலவிடப்பட்டதோ 6 லட்சம் தான்.

**கிராமவேலை வாய்ப்புத் திட்டம்**

கிராமவேலை வாய்ப்புத் திட்டம் ஒன்று துவக்கப்பட்டது நாட்டிலுள்ள எல்லா கிராமங்களிலும் இதை செயல்படுத்துவதாக இருந்தது. ஒவ்வொரு மாவட்டத்திலும் குறைந்தபட்சம் 1000 பேர்களுக்கு வேலை தருவது என்று இருந்தது. இதற்கு ஒதுக்கப்பட்ட தொகை ரூ 150 கோடி செலவிடப்பட்டதைக் குறித்து தகவல் இல்லை.

—யு. என். ஐ.

## கதவடைப்பை நீக்குக! தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம்

திருநெல்வேலி, ஜூன் 13—

நெல்லைத்திருத்து ஏ. எப். குவாரியை சட்ட விரோதமாகலாக்அவுட் செய்திருப்பதைக் கண்டித்து 9-6-72ல் ஆர்ப்பாட்ட ஊர்வலம் ஒன்றை நடத்தினர். ஏராளமான தொழிலாளர்கள் கலந்து கொண்டனர்.

நகரின் முக்கிய வீதிகள் வழியாக கலெக்டர் அலுவலகம் சென்று கலெக்டரிடம் கோரிக்கை மனுவை அளித்தனர்.

கலெக்டரிடம் சட்ட விரோதக் கதவடைப்பை நீக்கும்படி நெல்லைமாவட்ட பொதுத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் சு. பாலவிநாயகம்வற்புறுத்தினர்.

## அரசு ரப்பர் தோட்டத் தொழிலாளர் போராட்டத்திற்கு ஆதரவு

நாகர்கோவில் ஜூன், 14—

கடந்த 90 நாட்களாக குமரி மாவட்டத்திலுள்ள அரசு ரப்பர் தோட்டத் தொழிலாளர்கள் 1600 பேர் வேலை நிறுத்தம் செய்துவருகிருர்கள்.

**கோரிக்கை**

தனியார் தோட்டங்களில் வழங்கப்படும் சம்பளம் அரசு தோட்டத்திலும் வழங்கவேண்டும். காட்டு வேலைத் தொழிலாளர்களுக்கு நிரந்தர வேலை வேண்டும்.

இந்த இரண்டு கோரிக்கைகளையும் அமுல்படுத்தினல் அரசுக்கு நாளொன்றுக்கு சுமார் 3000 ரூபாய் அதிகம் செலவாகும் ஆனல் கோரிக்கைகளை வழங்க அரசு மறுத்து வருவதால் நாள் ஒன்றுக்கு ரூ 10,000 நட்டம் ஏற்படுகிறது. தொழிலாளர்களின் அரசு எனக் கூறும் திமுக அரசு தனியார் முதலாளிகளை விடப் படுமோசமாக செயல்படுகிறது.

**2000 பேர் ஆர்ப்பாட்டம்**

இவைகளை அரசு காலம் கடத்தாது தீர்த்து வைக்க வேண்டுமெனக் கோரி 9 6-72ல் சி. ஐ. டி. யூ சங்கங்களின் ஆதரவில் நாகர்கோவிலில் ஆர்ப்பாட்டம் நடந்தது. ஆர்ப்பாட்ட ஊர்வலத்தில் 2000 தொழிலாளர்கள் கலந்துகொண்டனர்.

வடசேரியிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு, டவ்வர் வேப்பமூடு வழியாக மாவட்ட ஆட்சியாளர்அலுவலகம் சென்று மகஜர் கொடுத்தது மகஜரில் அரசு ரப்பர் தோட்டத் தொழிலாளர்களின் கோரிக்கைகளை வழங்கும்படி வற்புறுத்தப்பட்டது. கோரிக்கைகளை வழங்காவிடில், இந்த கோரிக்கைகளுக்காக மாவட்டத்திலுள்ள அனைத்து தொழிலாளர்களும் வேலை நிறுத்தம் போன்ற நடவடிக்கைகளில் ஈடுபடக்கூடிய நிலை ஏற்படும் என்றும், தொழிலாளர்களுக்கு துரோகம் இழைக்கும் கறுப்பு மசோதாவை கைவிட வேண்டும் என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளது. மகஜரை, அரசுக்கு அனுப்பிவைப்பதாக மாவட்ட ஆட்சியாளர் கூறியுள்ளார். பின்னர், நாகர்கோவில் நகர மன்ற திடலில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் பி. பெருமாள் பி. சி. வேலாயுதம, ஜே. ஹேமச்சந்திரன், எம். எம. அலி பேசினர்.

திண்டுக்கல்லில் நடைபெற்ற மின்சார ஊழியர் மாநாட்டு ஊர்வலம்.

## தோழர் ஏ. கே. கோபாலன் விடுதலை

திருவனந்தபுரம், ஜூன் 14-

நீதிமன்றத்துக்குள் அத்துமீறி நுழைந்ததாக குற்றம் சாட்டப்பட்ட தோழர் ஏ. கே. கோபாலன் எம். பி. உதவி-சப் மாஜிஸ்ட்ரேட் திருமதி சுஜாதாவினல் விசாரிக்கப்பட்டாரல்லவா!

அவர் மீது சாட்டப்பட்ட குற்றச்சாட்டு நிரூபிக்கப்படவில்லை என்றும், அவர் நிர்ப்பந்தமாகப் போலீஸ் இன்ஸ்பெக்டரால் நீதிமன்றத்துக்குள் கொண்டு வரப்பட்டவரானதால், அவர் கோர்ட்டை அவமதித்தார் என்று கருதுவதற்கில்லை - என்றும் மாஜிஸ்ட்ரேட் தீர்ப்பளித்து தோழர் ஏ. கே. கோபாலனை விடுதலை செய்தார் உபரிநிலத்தில் சட்ட விரோதமாக இறங்கியதாக தன் மீது சாட்டப்பட்ட வழக்கில ஏ.கே.கோபாலன், முதலமைச்சர் அச்சுதமேனனையும், ரெவின்யூ அமைச்சரையும், ரெவின்யூ போர்டு அங்கத்தினர் ஒருவரையும் தமக்கு சாட்சிகளாக வரும்படி நீதிமன்றம் உத்தரவிட வேண்டுமென்று ஏ. கே. கோபாலன் மனுச் செய்திருந்தார்.

நான் அத்து மீறிப்புகுந்ததாகக்கூறப்படும் நிலம் சம்பந்தமாக சட்டபூர்வமான நிலைமைகளை மேற்கூறிய நபர்கள்தான் அதிகாரப்பூர்வமாகக்கூற முடியும். ஆகவே, அவர்கள் எனக்கு சாட்சியாகவந்து உதவி செய்ய வேண்டுமென கூறினர்.

காரணம், நிலச் சீர்திருத்தம் சம்பந்தமான அரசாங்கத்தின் கொள்கை பற்றிய வழக்கு இது என்றார்.

இதை, அரசாங்க வழக்கறிஞர் கடுமையாக எதிர்த்தார்.

## டாக்டர் காஸ்ட்ரோ சுற்றுப்பயணம்

பெர்லின், ஜூன் 13—

கியூபா நாட்டுப்பிரதமர் டாக்டர் பிடல்காஸ்ட்ரோ, இதுவரை ஆப்பிரிக்காவில் உள்ள கினியா, சீராலியோன், அல்ஜீரியா-ஆகிய நாடுகளிலும், கிழக்கு ஐரோப்பிய நாடுகளான ருமேனியா, அங்கேரி போலந்து ஆகிய நாடுகளிலும் வெற்றிகரமாகத் தனது சுற்றுப் பயணத்தை முடித்து பெர்லின் வந்துசேர்ந்தார்.

அவருக்குக் கிழக்கு ஜெர்மன் மக்களும் கிழக்கு ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின் பிரதமர் வில்லிஸ் டோப்பும் மகிழ்ச்சி ஆரவாரத்துடன்வரவேற்பளித்தனர்.

## புரட்சி அரசு அறிவிப்பு

சைகோன், ஜூன் 13—

அமெரிக்க ஆக்கிரமிப்பாளர்களையும் அவர்களது கைக்கூலிகளையும் வியட்நாம் மண்ணைவிட்டு வெளியேற்றும்வரை இன்று நடைபெற்று வரும் தீவிரமான எதிர்த் தாக்குதல் போர், ... என்றும் ... தென் வியட்நாம் குடியரசின் புரட்சி அரசு அறிவித்தது.

## குழு நியமனம்

புதுடில்லி, ஜூன். 13

காவேரி நீர் உபயோகம் சம்பந்தமான தகவல்களைச் சேகரிக்க இந்திய அரசு நால்வர் கொண்ட குழு ஒன்றை நியமித்துள்ளது.

தீக்கதிர்

## விலைஏற்றமும் அரசின் அலட்சியமும்

ஏழை மக்கள் வாங்கிச் சாப்பிட முடியாத அளவுக்கு அரிசி விலை உயர்ந்துள்ளது.

காங்கிரஸ் மேடைகளிலும் தி. மு, க. மேடைகளிலும் ஏழை மக்களுக்காக வடிக்கப்படும் கண்ணீர் ஆறுகப் பெருக்கெடுத்து ஓடுகிறது.

நம் நாட்டு மக்களின் 70 சதவிகிதமக்களின் சராசரி மாத வருமானம் ரூ. 20 தான் என்று மத்தியதிட்டஅமைச்சர் திரு. சுப்பிரமணியம் புள்ளி விபரம் கூறுகிறார்.

இந்நிலையில் ஏழை மக்கள் படி அரிசி விலை ரூ 3க்கு விற்றால் எப்படி வாழ முடியும்? இதைப்பற்றி மத்திய அரசோ மாநில அரசோ கொஞ்சமும் கவலைப்படவில்லை.

உணவுப் பங்கீட்டு முறையை தமிழக அரசு ரத்து செய்தபோது அரிசி விலை குறையும் என்று உணவு அமைச்சர் ப. உ சண்முகம் வாக்குறுதியளித்தார். உணவு பொருள்களின் விலை குறைவதற்குப்பதில் கூடினல் அரசு மீண்டும் பங்கீட்டு முறையைக்கொண்டுவரத் தயங்காது என்றும் அப்போது அவர் வாக்குறுதியளித்தார்.

இன்று நிலைமை என்ன?

சென்னையில் படி அரிசி ரூ. 3க்கு விற்பதைச் சுட்டிக் காட்டி பத்திரிகை நிருபர்கள் கேள்வி கேட்டபோது தம்மால் ஒன்றும் செய்ய முடியாது என்று சென்னைக் கலெக்டர் பதிலளித்துள்ளார்.

அரசாங்கத்தின் கையிருப்பிலுள்ள அரிசியை விடுவித்தால் வெளி மார்க்கெட்டில் விலை குறையாதா என்று நிருபர்கள் கேள்வி கேட்ட போது இதைத் தீர்மானிக்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தையே சாரும் என்று கலெக்டர் பதில் அளித்துள்ளார்.

இந்த நிலைமையைச் சாமளிப்பதற்கு மேலும் 3 அல்லது 4 ரேஷன் கடைகளைத் திறக்கும் திட்டத்தை மட்டும் கலெக்டர் அறிவித்துள்ளார்.

ஒரு பக்கம் உற்பத்திப் பொருள்களுக்கு அறுவடை சமயங்களில் நியாயமான விலை கிடைக்காததால் சிறு விவசாயிகள் பாதிக்கப்படுகிறார்கள். அந்தச் சமயங்களில் பதுக்கல் வியாபாரிகள் குறைந்த விலைக்கு வாங்கிக் கொள்ளையடிக்கிறார்கள்.

மறுபக்கம் மக்கள் கைக்கு எட்டாத அளவுக்கு செயற்கையாக தட்டுப்பாட்டை அதேவர்த்தகச்சூதாடிகள் உருவாக்கி விலையை உயர்த்திக் கொள்ளையடிக்கிறார்கள். இந்தநிலைமையை அரசாங்கம் அனுமதிக்கிறது. ஏழைகளுக்குப் பரிவு காட்டுவதாக சொல்லிக்கொள்ளும் அரசாங்கம் இன்று தங்களால் எதுவும் செய்யமுடியாதென்று கையை விரிக்கும் நிலைமையை ஏற்படுத்தியுள்ளது.

ஏழை மக்களுக்கு நியாய விலையில் அரிசி கிடைக்கச் செய்யும் பொறுப்பை இனியும் அரசு தட்டிக்கழிக்க முடியாது. அரிசி விலை உயர்ந்து கொண்டே போவதை கட்டுப்படுத்துவதற்கும் நியாய விலையில் மக்களுக்கு அரிசி கிடைக்கச் செய்வதற்கும் அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்கவில்லை என்றால், இதற்காக மக்கள் கிளர்ச்சியில் இறங்குவதைத் தவிர வேறு வழி என்ன?

## தம் நண்பர்கள் மீதே அமெரிக்கக் குண்டுவீச்சு

சைகோன், ஜுன். 12—

ஏகாதிபத்திய அமெரிக்க வெறியர்களின் கண்மூடித்தனமான குண்டுவீச்சுக்கு தங்களுடைய கூட்டாளியான தென்வியட்நாமின் பொம்மை அரசின் கூலிப் பட்டாளமே இரையாயின. இந்த குண்டு, "நாபாம்" என்னும் பயங்கரமான குண்டாகும். அது விழுந்த உடனேயே அந்த இடமும் தீப்பிடித்து அருகிலுள்ள பொருள்கள் எல்லாமே உருகி அழிந்துவிடும். நாபாம் குண்டை அமெரிக்க விமானங்கள் குறிதவறிப் போட்டதால் கூலிப்படைகளே வெந்து பொசுங்கினார்கள். ஓடிவிளையாடிக்கொண்டிருந்த குழந்தைகள் மீதும் தீப்பற்றி எரிந்தது. பாஷ்-தி-கிம்பக், என்னும் ஒன்பது வயது சிறுமியின் உடை தீப்பற்றி எரிந்தது; பக்கத்திலிருந்தவர்கள், அந்தச் சிறுமியின் உடைகளைக் கிழித்து எறிந்தார்கள்.

அவளும், அவனுடைய நண்பர்களும், உயிருக்குப் பயந்து. அலறிக்கொண்டு ரோட்டில் ஓடினார்கள். இவ்வாறு அலறியடித்துக் கொண்டு ஓடும் குழந்தைகளின் படம் சில நிமிடங்களில் பத்திரிகைகளில் வெளியாகியுள்ளன. வீட்டிலிருந்து அவளுடைய தாயாரும் தீக்காயங்களோடு, தன் கைக் குழந்தையைத்தூக்கிக் கொண்டு வந்தாள். சில மணி நேரங்களில் குழந்தை இறந்துவிட்டது. பான்-க்கு போலீசார் தீக்காயங்களுக்காக, சிகிச்சை நடைபெறுகிறது.

## பெரியகுளத்தில் மாநாட்டு நிதி அளிப்பு

பெரியகுளம், ஜுன். 13—

பெரியகுளம் வடகரை பஸ் நிலையம்அருகில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டுஅளிப்புப்பொதுக் கூட்டம் 9—3—72-ந் தேதி நடந்தது. தோழர் பி. அப்துல் ரகுமான் தலைமைவகித்தார்.

கேரள முன்னாள் போக்குவரத்து அமைச்சர் தோழர் இம்பிச்சிபாவா கலந்து கொண்டு பேசினார். கட்சியின் அகில இந்திய 9-வது மாநாட்டைப் பற்றியும், இன்றைய அரசியல் நிலை குறித்தும் பேசினார்.

மற்றும் பல தோழர்கள் பேசினர்.

பெரியகுளம் கட்சிக் கிளையின் சார்பில் மாநாட்டு நிதியாக ரூ. 301ஐ தோழர் இம்பிச்சிபாபாவிடம் தோழர் டி, ஆர், சுப்ரமண்யம் அளித்தார்,

கூட்டத் துவக்கத்தில் தோழர் ஆர். அழகர் இயக்கப் பாடல்களைப் பாடினார்.

# விலைவாசி உயர்வதற்கு யார் காரணம்?

# பரமாத்மாவா இந்திராவா?

## தேனிக் கூட்டத்தில் இம்பிச்சிபாவா பேச்சு

தேனி, ஜுன். 13—

மக்களது தேவைப் பொருள்களின் விலை உயர்ந்துள்ளது. உப்பு, இரும்பு, மிளகு போன்றவற்றின் விலை உயர்ந்துள்ளது. இந்த விலை உயர்வை யார் உருவாக்கினார்கள்? வான மண்டலத்தில் இருக்கும் பரமாத்மாவா உருவாக்கினார்? இல்லை. இந்திரா காந்தியின் அரசுதான்- காங்கிரஸ் அரசுதான்- உருவாக்கியது என்று தோழர் இம்பிச்சி பாவா கூறினார்.

தேனியில், சென்ற 9—6—72 அன்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தோழர் எஸ், ராமையா தலைமையில் நடைபெற்ற மாநாட்டு நிதியளிப்பு பொதுக் கூட்டத்தில் பேசுகையிலே அவர் அவ்வாறு கூறினார், அவர் மேலும் பேசுகையில் கூறியதாவது;

இந்திராவின் சோசலிசம் எவ்வாறு அமுல் படுத்தப்படுகிறது? ஏழைகள் குறைந்த வருமானத்தினால் கீழ்நிலைக்கு வீழ்ச்சியடைவதின் மூலமும் சில குபேரர்கள் மேலும்மேலும் பெரும் குபேர்களாக வளர்வதின் மூலமும்தான் அமுல் நடத்தப்படுகிறது.

சுதந்திரத்துக்கு முன் -30 கோடி ரூபாயாக இருந்த பிர்லாவின் மூலதனம் இன்று 570 கோடி ரூபாய் மூலதனமாக வளர்ந்திருககிறது.

30 அல்லது 40 கோடி ரூபாயாக இருந்த டாட்டாவின் மூலதனம், இன்று ரூ, 400 கோடிக்கு மேல் பெருகியுள்ளது,

காங்கிரஸ் ஆட்சியில்,— சிங்கத்தின்முன் மான்குட்டி இரையாக வசியெறியப்படுவது போல், முதலாளியின முன் ஏழைகள் வீசியெறியப்பட்டு இரையாக்கப்படுகிறார்கள்.

### உபதேசம் யாருக்கு?

வேலை நிறுத்தம் செய்யாதீர். போராட்டத்தின்மூலம் பிரச்னை தீராது என்று தொழிலாளர்களைப் பார்த்து இந்திராகாந்தி கூறுகிறார், ஆனால் முதலாளிகளைப்பார்த்து அவர், மக்களைச் சுரண்டுவதை நிறுத்துங்கள் - என்றுகூறுவதில்லை; அவர்களுக்கு ஆதரவாகவே இருந்து வருகிறார்.

ஏழைகளின் வீடுகளில் மின்விளக்குகள் பயன்படுத்தப்படுவதில்லை. சாதாரண அரிகேன் விளக்குகள்தான் பயன் படுத்தப்படுகின்றன. அதற்குத் தேவையான மண்ணெண்ணெயின் விலை 2 மடங்கு உயந்துள்ளது. முதலாளிகளை வளர்ப்பதற்காக மண்ணெண்ணெய், குருடாயில், தேங்காய் எண்ணெய், கடலை எண்ணெய், சோப்பு—மற்றும் இதர பொருட்களின் விலைகள் உயர அனுமதிக்கப்படுகிறது. நமகு நேரடி அனுபவம் உண்டு. மோட்டாரகத் துணியின் விலை 1மடஙகுஅல்ல, பலமடங்குகள் உயாந்துள்ளது. இவற்றையெல்லாம் உபயோகிப்பவர்கள் சாதாரணமக்கள் தானே?

### சோஷலிஸமா?

மறைமுக வரிகள் மூலம் நகரத்தில் இருக்கும் தொழிலாளியும் கிராமப் புறங்களில் இருக்கும் விவசாயியும் தங்களுடைய வருமானத்தில் ரூபாய்க்கு 47 பைசா சுரண்டப்படுகிறார்கள் இதை எப்படி சோசலிசம்என்று கூறமுடியும்?

இந்திராவுக்குத் தெரியும் இந்நிலை நீடிக்கமுடியாது என்று. ஜனநாயக சக்திகள் நாடெங்கும் கொதித்துக் கிளம்பி, அந்நிலையை முறியடிக்கும். அதனால் தான் ஜனநாயக இயக்கத்தின் மீது அவர் அடக்கு முறையைஏவி விட்டுள்ளார்

அண்மையில் நாடாளுமன்றத்தில் அரசினால் கொண்டுவரப்பட்ட மசோதாக்கள்அனைத்தும் மக்கள் முன்னேற்றத்தைத் தடுப்பதற்காகவே கொண்டுவரப் பட்டுள்ளன

வேலை நிறுத்தத்தைத் தடைசெய்ய மசோதா, தேசப் பாதுகாப்புச் சட்டம் தொழிற் பாதுகாப்புப் படை சட்டம்-போன்றவைகொண்டுவரப்பட்டன.

### 60 சத மூலதனம்

அதன் துவக்கமாகத் தான் மேற்கு வங்கத்திலே தேர்தலில் ஜனநாயகம் தூக்கி யெறியப்பட்டது, அங்கு ஜனநாயகத்தை காங்கிரஸ் அரசு படுகொலை செய்ததற்கு ஓர் அடிப்படையான காரணம் உண்டு, இந்தியாவில் உள்ள பெரு முதலாளிகள் தங்களது 60 சத விகித மூலதனத்தை மேற்குவங்கத்தில் தொழிலில் ஈடுபடுத்தியிருக்கிறார்கள் அதன்மூலம் உழைக்கும் மக்களைச் சுரண்டுகிறார்கள் அந்தச் சுரண்டல் கொடுமையை முறியடிக்க ஸ்தாபனரீதியாக வலுப் பெற்றிருக்கும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி இருக்கிறது, ஜனநாயக இயக்கம் இருக்கிறது, அதனால்தான் இந்திரா அரசு, பெரு முதலாளிகளைப் பாதுகாக்க அங்கு கொடிய அடக்கு முறையை ஏவுகிறது—

(7-ம் பத்தி பார்க்க)

## ஆசிரியருக்கு...

## கெடு பிடி வசூலை நிறுத்திவைப்பார்களா

ஜயா,

சங்கரன்கோவில் வட்டத்தைச் சேர்ந்த செவல்குளம் கிராமத்தில் கடந்த நான்கு ஆண்டுகாலமாக மழையில்லாக் காரணமாக மக்கள் வறுமையோடு போராடிக் கொண்டிருக்கின்றனர். இந்நிலையில் நடுத்தர, ஏழை விவசாயிகள் அரசாங்கக் கடன்களை மேற்கண்ட காரணங்களால் கட்ட இயலவில்லை. ஆனால் கடன் வசூல்செய்ய அதிகாரிகள் கெடுபிடி செய்கின்றனர், 9-6-72 அன்று காலையில் போலீஸ் ஜவான்களுடன் அதிகாரிகள் விவசாயிகளின் வீட்டில் உள்ள சட்டிபானைகளை பண்ட, பாத்திரம், ஆடு, மாடு, கோழிகள் முதலியவற்றை "ஜப்தி" செய்துள்ளனர். அதிகாரிகளிடம், ஓரிருமாதங்களில் வேளாண்மையின் மூலம் கட்டிவிடுகிறோம், இரண்டு மாதங்களுக்கு தவணைகொடுங்கள் என்று கெஞ்சிகேட்டோம், கேட்கவில்லை. ஜப்தி செய்துள்ளனர் தற்போது பருத்தி, வத்தல் போன்ற விளை பொருட்களை குவிண்டாலுக்கு ரூ, 120, ரூ, 130 வீதம்கூட கேட்க நாதியில்லாத இந்நிலையில் பொருட்கள் தேங்கிக்கிடக்கின்றன,

இப்பொருள்களுக்குஅரசு நியாயமான விலை நிர்ணயம் செய்து, கடன் நிவாரண, கடன் தள்ளிவைப்புச் சட்டங்களை இயற்றி, நிர்ணயவிலை கிடைக்கும்வரை கெடுபிடி வசூலை அரசு நிறுத்த வேண்டும் விவசாயிகளின் முதுகெலும்பு ஒடிந்துவிட்டால் நாட்டின் கதிஎன்னவாகும் என்பதனைப் புரிந்து, கடன் கெடுபிடி வசூலை அரசு தடுத்து நிறுத்துமா?

தோழமையுள்ள
கே, வேணுகோபால்

## சென்னையில் பழிவாங்கல்

சென்னை, ஜுன் 13.

பொதுவுடைமைப் பூங்காவை உண்டாக்கப் போவதாகவும் பொற்காலத்தைப் படைக்கப் போவதாகவும் எல்லாம், பேசுகிற தி. மு. க. ஆட்சியிலே, இன்று சென்னை நகரில் என்ன நடக்கிறது? தொழிலாளர்கள் இன்று கேட்பது பொதுவுடைமையையும் அல்ல, பொற்காலத்தையும அல்ல. கொஞ்சம் கூடுதல் சம்பளம், விலைவாசிக்கேற்ற பஞ்சப்படி, நியாயமான போனஸ், ஜனநாயக உரிமைகள்......இவைகளைத்தான் கேட்கிறார்கள்.

இந்த உரிமைகளைக் கூட கொடுக்க மறுப்பவர்கள் எங்கே பொதுவுடைமைப் பூங்காவையும், பொற்காலச் செழிப்பையும் கொண்டுவரப் போகிறார்கள்?

### சென்னை போக்குவரத்திலே

உதாரணமாக, சென்னை, நகரிலே, அரசு போக்குவரத்திலே என்ன நடக்கிறது?—என்பதைப் பற்றி செங்கொடிச் சங்கப் பொதுச் செயலாளர் தோழர் அரிபட் அறிக்கை விட்டுள்ளார். அதில்,

"அரசாங்கப் போக்குவரத்திலுள்ள செங்கொடிச்சங்க முக்கிய ஊழியர்கள் மீது, தி மு க சங்கததைச் சேர்ந்தவர்களைக்கொண்டு புகார் கொடுக்கவைத்து, அதனடிப் படையில் எந்த விசாரணையுமின்றி வருடக்கணக்கில் சஸ்பென்ஷனில் வைத்து பழி வாங்கும் நடவடிக்கையில் அரசும் நிர்வாகமும் இறங்கியிருக்றன

இதே நிலை இன்னும் தொடர்கிறது கடந்த 3-ந் தேதி காலை 6-40 மணியிலிருந்து அயனவரம் பணிமனையில் உள்ள டெக்னிகள் தொழிலாளர்கள் தங்களது ஷிப்ட்நேரம் மாற்றியமைக்கப்பட்டதை எதிர்த்து வேலைநிறுத்தம் செய்து வந்தனர். இந்த போராட்டத்தை செங்கொடிச் சங்கம் ஆதரித்தது

அதனால் ஆத்திரமுற்ற நிர்வாகம், செங்கொடிச் சங்க உதவிச் செயலாளரும் டிரைவருமான பாஸ்கரனையும், நிர்வாகக் கமிட்டி உறுப்பினரான சங்கரையும் சஸ்பெண்டு செய்திருக்கிறது. வழக்கம் போல் தன்னைத் தாக்கியதாக தி, மு, க, சங்கத் தலைவர் கோவிந்தசாமியைப் பிடித்துப் புகார் செய்யவைத்து இதன்பேரில் இப்படிப் பழிவாங்கியுள்ளது விசாரணை. ஏதும் கிடையாது,

அரசு துறையில் விசாரணையில்லாமல் இப்படிப் பட்ட பழிவாங்கல் நீடிக்கிறது.

### லேலண்டில்

சென்னை அசோக் லேலண்டு தொழிலாளர்களின் கோரிக்கைகளை உரிய காலத்தில் ஒழுங்காகத் தீர்த்து வைக்கப்படாமல், மாதக் கணக்கில் 4000 தொழிலாளர்களையும் பட்டினி போட்டார்கள், லேலண்டு உள்ளேயும் வெளியேயும் போலீஸ் ஆட்சியே நடக்கிறது,

தொழிலாளர்களின் நியாயத்தை பொதுமக்களுக்கு எடுத்துக்கூற முடியாதபடி 144 தடை உத்தரவு அந்த வட்டாரத்தில் தொடர்ந்து நீடிக்கப்பட்டு வருகிறது, கைது செய்யப்பட்ட தொழிலாளர்களை விடுதலை செய்வதிலும் அவர்களை வேலைக்கு எடுத்துக்கொள்வதிலும் தாமதம் காட்டப்பட்டுவருகிறது. ஏராளமானபேர் சஸ்பெண்டும் செய்யப்பட்டிருக்கிறார்கள்,

இப் பிரச்சினைகளைப்பற்றி யெல்லாம் முறையான சட்ட பூர்வமான சங்கத் தலைமையுடன் பேசித்தீர்ப்பதற்குப் பதிலாக, முதலாளிகளின் கையாட்களின் அட்டகாசங்கள் தொடர்ந்து, நடக்க அரசு அனுமதித்து வருவதாக தொழிலாளர் தலைவர் குசேலர் அறிக்கை விட்டுள்ளார்.

# குறிப்புகள்

## வலது கம்யூனிஸ்டுகளுக்கு விழும் அடிகள்

இந்திரா காங்கிரசுடன் கூட்டுச் சேர்ந்த வலது கம்யூனிஸ்ட்டுகள் இந்திரா காங்கிரசின் வெற்றியை "தேசிய ஜனநாயகத் திட்டத்தின்" வெற்றி என்று வர்ணித்தார்கள்.

மாநிலங்களுக்கான தேர்தல் முடிவுகள் வெளியானதும், இன்னும் மூன்று ஆண்டுகளில் "தேசிய ஜனநாயக அரசு" தோன்றும் என்று வலது சம்யூனிஸ்ட் தலைவர் திரு. எஸ். ஏ. டாங்கே ஆரூடம் கூறினார்.

இவ்வாறு ஆரூடம் கூறிக்கொண்டு காங்கிரசுடன் கூட்டுச் சேரும் பாதையில் செல்லும் வலது கம்யூனிஸ்டுகளுக்கு எத்தகைய "வரவேற்புகள்" கிடைக்கின்றன தெரியுமா?

மத்திய பிரதேச முதலமைச்சர் பி. சி. சேத்தி வலது கம்யூனிஸ்டுகளை இரட்டை வேடதாரிகள் என்று வர்ணிக்கிறார்.

யார் எப்படி வர்ணித்தால் என்ன? இந்திரா காங்கிரசுடன் இணைந்திருப்பதில் காணும் சுகமே அவர்களுக்கு பெரிதாகப்படுகிறது போலும்!

இந்திரா காங்கிரசுக்கு பல்லக்குத் தூக்கிக்கொண்டு திரியும் போது எவ்வளவு விரட்டுவிரட்டினாலும் பல்லக்கை கீழே வைக்க வலது கம்யூனிஸ்டுகள் தயாராக இல்லை.

இந்தப் பல்லக்குத் தூக்கிகளுக்கு எத்தகைய மரியாதை கிடைக்கிறது என்பதற்குஅண்மையில் வெளியான செய்திகளே நல்ல சான்றுகள்.

பிரதம மந்திரிக்கு ஆலோசனை சொல்ல எங்களை விட இவர்களுக்கு (வலது கம்யூனிஸ்டுகளுக்கு) அப்படி என்ன யோக்கியதை இருக்கிறது என்று காங்கிரசிலுள்ள இளம் துருக்கியர் கோஷ்டியின் தலைவரான சந்திரசேகர் கேள்வி கேட்டுள்ளார்.

சந்திரசேகர், மோகன்தாரியா, மாளவியா போன்றவர்களின் பேச்சுக்களைக் காட்டித்தான் வலது கம்யூனிஸ்டுகள் தங்களுடைய நிலைபாட்டை நியாயப் படுத்தினர்.

இன்று சந்திரசேகரே காங்கிரசுக்குள் புகுந்துள்ள வலது கம்யூனிஸ்டுகளுக்கும்வெளியே இருப்பவர்களுக்கும் சாட்டையடி கொடுத்துள்ளார்.

"வலது கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து வந்தவர்கள் ஒரு கும்பலாக செயல்படுகிறார்கள்...... அதிகாரபீடத்தை அடையும் திட்டம் தீட்டுவதற்கு அவர்கள் ரகசியக் கூட்டங்கள் நடத்தத் தொடங்கினர். சொந்த லாபங்களை அடைவதே அவர்களுடைய திட்டம். இடது சாரிக் கொள்கைபற்றி அவர்கள் பேசுவதெல்லாம் கட்சியில் (காங்கிரசில்) தங்களுடைய சந்தர்ப்பவாதப் பாத்திரத்தை மூடி மறைப்பதற்கேயாகும்" என்று சந்திரசேகர் எழுதியுள்ளார்.

காங்கிரசுக்குள் புகுந்த சோஷலிஸ்ட் கட்சியினரும் வலது கம்யூனிஸ்ட் கட்சியினரும் பதவிக்காகச் சண்டை போட்டுக் கொள்ளுவதும், இந்தத் "தீவிரவாதிகளை"ப் பார்த்து கட்சியைவிட்டு வெளியேறுமாறு இந்திராகாந்தி எச்சரித்திருப்பதும் வலது கம்யூனிஸ்டுகளின் பாதை எத்தகையது என்பதை வெட்ட வெளிச்சமாக்கி விட்டது.

இந்நிலையில் தங்களுடைய கட்சியிலிருந்து ஓடிய ஓடுகாலிகளுக்கு வக்காலத்து வாங்கி, காங்கிரஸ் "தீவிரவாதிகளிடையே" பிளவு ஏற்பட்டிருப்பதற்கு முன்னாள் வலது கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள் மீது குற்றம் கூற முடியாது என்று வலது கம்யூனிஸ்ட் ஏடான "நியூஏஜ்" வெட்கமில்லாமல் சமாதானம் கூறுகிறது.

கேரளத்திலும்—காங்கிரசுக்கும் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையே சந்தர்ப்பவாதச் சண்டை முற்றியுள்ளது,

வலது கம்யூனிஸ்ட் அமைச்சர் டி, வி. தாமஸ் மீது காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான சி. எம், ஸ்டீபன் பாய்ந்துள்ளார்,

"டி, வி, தாமஸ் எப்போதும் பிளவு வேலையே செய்து வருகிறார். மார்க்சிஸ்ட் தலைமையிலிருந்த ஐ. மு அரசிலும் இதே பாத்திரத்தைத்தான் அவர் வகித்தார், தாமசை அவருடைய கட்சி கட்டுப்படுத்தா விட்டால் கூட்டு அரசாங்கம் நிலைத்திருப்பதற்கே ஆபத்து ஏற்படும்" என்று ஸ்டீபன் எச்சரித்துள்ளார்.

திருவாங்கூர் இரசாயன உரத்தொழிற்சாலைதாவாவில் சமரச ஏற்பாடு எதுவும் நடைபெறாது என்று டி. வி, தாமஸ் அறிவித்தவுடன், காங்கிரஸ் அமைச்சர் புருஷோத்தமன் பேச்சுவார்த்தைக்கு ஏற்பாடு செய்திருப்பது தாமசின் கௌரவத்துக்கு பலத்தஅடியாகும் என்றும் பத்திரிகைகள் குறிப்பிட்டுள்ளன,

காங்கிரசுடன் கூட்டுச் சேரும்போது எந்த அடியையும் வாங்கிக்கொண்டு பதவியில் உட்கார்ந்திருப்பதே வலது கம்யுனிஸ்டுகளின் கொள்கை என்பது இப்போது நன்கு தெரிந்து விட்டது.

— ஆ. ச.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

### வாலாட்டும் வலது

மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியை தோற்கடிக்க மட்டும் இந்திரா அரசு அடக்கு முறையை ஏவி விடவில்லை, எல்லா ஜனநாயகக் கட்சிகளையும் ஒழிக்கவும்தான் அடக்குமுறையை ஏவி விட்டது, ஆனால், அதே சமயத்தில் தனக்கு வாலாட்டுகிற வலது கம்யூனிஸ்ட் கட்சியின் வெற்றிக்கு இந்திரா அரசு பாடுபட்டது-என்றார் தோழர் இம்பிச்சிபாவா,

அவர்மேலும் பேசுகையில் மதுரையில் நடைபெற இருக்கும் மார்க்சிஸ்ட்கட்சி மாநாட்டின் சிறப்பினை விளக்கி, "இது உங்களின் மாநாடு உழைக்கும் மக்களின் மாநாடு" என்று கூறி மாநாட்டு அணிவகுப்பில் கலந்துகொள்ளுமாறு அனைவரையும் கேட்டுக் கொண்டார்,

இந்த பொதுக்கூட்டத்தில், தோழர்கள் வீ, சொக்கலிங்கம், பாலகிருஷ்ணன், ஓ. சீனிவாசன் ஆகியோரும் பேசினர்,

### மாநாட்டு நிதி

மாநாட்டு நிதியாகதேனி கிளையின் சார்பாக ரூ 202 ஆண்டிபட்டி பகுதி கிளைகளின் சார்பாக ரூ 285 எட்டப்பராஜபுரம் கிளை சார்பாக ரூ. 41 கோபாலபுரம் கிளை சார்பாக ரூ 25 ஆக மொத்தம் ரூ 581 தோழர் இம்பிச்சிபாவாவிடம் வழங்கப்பட்டது.

## லட்சுமிநாயக்கன் பட்டியில்

லட்சுமிநாயக்கன்பட்டி, ஜுன். 12—

மார்க்சிஸ்ட்கட்சி பொதுக் கூட்டம் ஜுன் 2-ல் நடைபெற்றது எஸ். செந்தட்டிக்காளை தலைமை வகித்தார்.

பி. வி. துரைராஜ், எம். ராமசாமி, எம். சிவனு பேசினர்.

குமார்குழுவினர் இன்னிசை கச்சேரி நடைபெற்றது.




## வெற்றி நோக்கி..!

( வழி நடைப் பாட்டு )

— ப. வேலுச்சாமி
பொள்ளாச்சி

வெற்றி நோக்கி விரையுமெங்கள்
வியட்காங்கின் வீரர்காள்!
எட்டுத் திக்கும் உங்கள் புகழ்
எடுத்துச் சொல்லி வாழ்த்துவோம்!

முற்றுகையில் சிக்கிக் கொண்டு
முனங்குகின்ற நிக்சனை
முட்டி பெயர தாக்கி வீழ்த்தி
முழுதும் வெற்றி கொள்ளுவீர்!

வெட்டுப்பட்ட வியட்நாமில்
வீரங்கொண்ட செங்கொடி
ஒற்றுமைக் கரங்களாலே
ஓங்கி நிற்கச் செய்கிறீர்!

பட்டு விட்ட பாடனைத்தும்
பலன் கொடுக்கும் நிச்சயம்!
சொட்டு ரத்த முள்ள வரை
சோர்வு ஏது உம்மிடம்?

பண்டுதொட்டு கொள்ளைகொள்ளும்
பாவியைத் தொலைத்திட
இரண்டு பட்ட தாயகத்தை
இணைக்கும் புனிதப் போரிலே

குண்டு பட்டு கொள்கை நெஞ்சம்
குருதி கொட்ட நேரினும்
கொண்டிருக்கும் செங்கொடியை
கொலுவிருக்கச் செய்கிறீர்!

# தோல் பதனிடும் தொழிற்சங்கபிரதிநிதிகள் கூட்ட முடிவுகள்

**வாணியம்பாடி, ஜூன். 11— தமிழ்மாநில தோல்பதனிடும் தொழிற் சங்க பிரதிநிதிகள் கூட்டம் ஜுலை 9ம் தேதி இங்கு நடைபெற்றது. அக் கூட்டத்தில் கீழ்வரும் தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன:**

தமிழ் மாநில தோல் பதனிடும் தொழிற்சங்க பிரதிநிதிகள் கூட்டம் ஜூன். 9-ம்தேதி இங்கு நடைபெற்றது. அக் கூட்டத்தில் கீழ் வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தி.மு. அரசின் தொழிலாளர் இயக்கத்திற்கு விரோதமாக, நிர்வாகங்களுக்கு ஆதரவாக எடுத்து வரும் நடவடிக்கையை கூட்டம் கண்டித்தது, அடக்கு முறைக்கொள்கைகளை கைவிடும்படி மாநிலஅரசை கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

தி.மு க. அரசு கொண்டு வந்துள்ள தொழிற்சங்க அங்கீகார(கருப்பு)மசோதாவின் தொழிாளர் விரோத ஷரத்துக்கள் காரணமாக அதை உடன் வாபஸ் பெறும்படி மாநில அரசைக் கோருகிறது.

நமது நாட்டிலிருந்து தோல் ஏராளமாக ஏற்றுமதியாகி வருகிறது. அப்படி ஏற்றுமதி செய்யப்படுவதில் பச்சைத் தோலாகவும், பாதி பதனிடப்பட்டும் 1/4 பகுதி வேலை செய்து பிக்கிலாகவும்ஏற்றுமதியாகி வருவதால் நாட்டில் பெருமளவு வேலையற்ற நிலை பெருகி வருகிறது. பதனிடப்படாத தோல் ஏற்றுமதி தடை செய்யப்படவேண்டும்.

1950ஆம் ஆண்டு நேரு தலைமையில் அமைக்கப்பட்ட திட்ட கமிஷன பதனிடப்படாத தோல் ஏற்றுமதிசெய்யக்கூடாதென்றும் வேலையற்ற நிலைமாற தோல்பண்டப்பொருள்உற்பத்திச்சாலைகள் 4 தென்னகத்தில்கட்டப்படும் என்றும் கூறியதிட்டம் ஏட்டளவிலேயே நின்றுவிட்டது. அந்தத் திட்டத்தை ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்துடன் இணைத்துநிறைவேற்றக்கோரப்படுகிறது

### கதவடைப்புகளுக்குத் தடை விதிக்கவும்

இன்று தொழிலாளர்களுக்கு இருந்துவரும் குறைந்த பட்சபாதுகாப்புகளும் பறிக்கப்பட்டுவிட்டது. இயந்திரம் புகுத்துவதை உறுதியாக எதிர்த்ததால் முதலாளிகள் அடிக்கடி தோல் ஷாப்புகளை மூடித்தொழிலைநவீனப்படுத்திக்கொண்டதுடன் தொழிலாளர்களை ஒப்பந்தக்கூலிகளாக வைத்து, தினசரி சம்பளம் கொடுத்து வேலை வாங்கி வருகின்றனர். இதனால் ஏற்கனவே இருந்து வந்த பி எப்., இ எஸ் ஐ நிரந்தர வேலை என்பது 100க்கு 60 பேர்களுக்கு இல்லாமல் போய்விட்டது எனவே கதவடைப்புகளைத் தடை செய்யக்கோருகிறது.

### கிராஜுடி

இந்தத் தொழில் ஈடுபட்டுள்ளவர்களில் 90% தாழ்த்தப்பட்ட மக்களாகவே இருந்து வருவதுடன் குறைந்த கூலித்தொழிலாளர்களாகவும் இருந்து வருகின்றனர். சமூகப் பாதுகாப்பற்ற தொழிலாளர்களுக்கு சேவைகால நிவாரணம் இல்லை என்பது கொடுமையிலும் கொடுமை. எனவே வயது முதிர்ந்தாலோ, இறந்து போனாலோ, விலகிக்கொண்டாலோ, வியாதியால் பாதிக்கப்பட்டுத் தகுதி இழந்தாலோ வருடத்திற்கு ஒரு மாதச் சம்பளம் கிராஜுடியாகத் தரும்படிகோருகிறது.

### ஊதிய உயர்வு

1968ம் ஆண்டு தமிழ் மாநிலஅரசுஆணைஎம் எஸ் 3537 படி (ஸ்கில்டு) தொழிலாளிக்கு ரூ. 3 90ம் திறைமையற்ற தொழிலாளிக்கு ரூ. 3.40ம் தினசரிச் சம்பளமாக மாதத்தில் ரூ. 125 கூடக் கிடைப்பது இல்லை இந்த அகவிலை உயர்வான காலத்தில் இந்த வருவாயில் வாழ்க்கை நடத்த இயலாது. எனவே,

அ இயந்திரத் தொழிலாளி திறமையான (ஸ்கில்டு) தொழிலாளர்களுக்கு மாதம் ரூ. 250-00 (எலங்காரம் எமரி வேலை)

ஆ ஓரளவுதிறமைஉள்ள தொழிலாளிக்கு (செமிஸ்கில்டு) மாதம் (கட்டை வேலை) ரூ 200-00

இ. திறமையற்ற தொழிலாளிக்கு (அன்ஸ்கில்டு) மாதச் சம்பளம் (சால் காவல் பென்) ரூ. 175-00 குறைந்தபட்சசம்பளமாகத் தரப்பட வேண்டும்.

ஈ, எண்ணிக்கைக்கு மேல் செய்யும் தோல் வேலைகளுக்கு 100க்கு ரூ. 1-00 வீதம் சம்பள உயர்வுவேண்டும். யூனிட் முறையில் செய்யும வேலைக்கு முதல் யூனிட்டுக்குரூ. 3-00 என்று யூனிட்டுக்கு 3-ம் என்று நிர்ணயம் செய்ய வேண்டும்.

### வேலை அளவு

பெரும்பாலும் மெஷின்களில் வேலைகள் செய்து வருவதாலும் ரசாயனப் பொருட்கள் உதவியால் பதனிடப்படுவதால் நீண்ட நேரம் வேலைசெய்வதுகடினமாக உள்ளது வேலைஅளவு நிர்ணயம் இல்லாமல் இருப்பது கொடுமையானது. எனவே இலங்காரம்பட்டை வேலைகளுக்கு 500 தோல் எண்ணிக்கை இருக்கவேண்டும். கை வேலைக்கு ஏற்கனவே யூனிட் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. எமரி 400, இழவை 500, பரப்பு தோல் 590.

### வார விடுமுறை ஊதியம்

இன்று உள்ள ரொட்டேஷன் லீவு முறையை மாற்றி ஞாயிறு தோறும் வார விடுமுறை அளிக்கக்கோருவதுடன் சென்னை உயர்நீதி மன்றத்தீர்ப்புப்படி வாராந்தர விடுமுறை நாளையும் சேர்த்து சம்பளம் தரக் கோருகிறது.

### வேலைநேரச் சீருடைகள் வழங்க

தோல் ஷாப்புகளில் திறந்த மேனியுடன்தான் தொழிலாளர்கள் வேலை செய்து வருகின்றனர். இதனால் பொதுச் சுகாதார நலம் பாதிக்கப்படுவதால் ஆண், பெண் தொழிலாளிகளுக்கு இரண்டு ஜோடிகள் வேலைநேர உடைகள் தரக் கோருகிறது

### குடி இருப்பு

தொழில் நவீனமயமான அளவு தொழிலாளர்நிலையில் எவ்வித மாற்றமும் இல்லாதது, நாட்டின் அவல நிலைக்கு ஓர்எடுத்துக்காட்டு. எனவே தொழிற்சாலை கட்டும்போதே தொழிலாளர்களுக்கு குடியிருப்பு கட்டித் தரக்கோரப்படுகிறது.

### ரோம உடைகள்

இயற்கையான நிறம் கொண்ட ஆட்டுரோமங்கள் ஏராளமாகக் கிடைத்துவருகிறது இவைகள் அனைத்தையும் அரசுத்துறையில் சேகரம்செய்து ரோமஉடைகள் மலிவான விலையில் உற்பத்தி செய்யப் போதுமான வாய்ப்பு உள்ளதை அரசு கவனத்திற்குக் கொண்டு வருவதுடன் அரசு மேற்கொள்ளக்கோருகிறது.




# தோட்டங்களிலே கொள்ளை

தென் இந்திய தோட்ட முதலாளிகள், தொழிலாளிகளுக்கு நியாயச் சம்பளம் தர மறுத்தனர். அதனால் சமீபத்தில் பிரம்மாண்டமான போராட்டம் ஒன்று நடந்தது. வடஇந்தியத் தோட்டத் தொழிலாளர்களுக்கு கிடைக்கும் சம்பளத்தைவிட தென் இந்திய தோட்டத்தொழிலாளிகளுக்கு மிகக் குறைந்த சம்பளம் தரப்பட்டு வருகிறது இந்த விபரங்களை தீக்கதிரில் முன்பு வெளியிட்டோம்.

தென்னிந்திய முதலாளிகள் தரப்பில் இதற்கு என்னகாரணம் சொல்லுகிறார்கள்? வட இந்திய முதலாளிகளைப் போல தென் இந்திய முதலாளிக்கு லாபம் கிடைக்கவில்லை என்று சொல்லுகிறார்களா?

1971 டிசம்பரில் வெளியான வடஇந்திய, தென் இந்திய தோட்டங்களின் வரவு-செலவு கணக்குகள் பம்பாயிலிருந்து வெளிவரும் **"காமர்ஸ்"** ஏட்டில் வெளியாகியுள்ளது. அதில் பெரும்பாலான வடஇந்திய கம்பெனிகளின் பங்கு மதிப்புகளும் லாப விகிதங்களும் ஒரு சில சம்பெனிகளைத் தவிர, வீழ்ச்சியடைந்துள்ளதென அறிவிக்கப்பட்டுள்ளது.

கே. பி. கோயங்கா நடத்தும் அஸ்ஸாமிலுள்ள 'கோட்முல்லை' என்னும் டீ எஸ்டேட்டின் ஒருபங்கு 10 ரூபாய், ஆனல் இதன் மார்க்கெட் மதிப்பு 4-50 ஆக வீழ்ச்சியடைந்துள்ளது

எஸ் பி. தத்தா என்பவருக்குச் சொந்தமான 'ஆனந்த பாக்' என்ற மற்றொரு அஸ்ஸாம் தேயிலை தோட்டத்தின் ஒரு பங்கின் மதிப்பு 10 ரூபாய். ஆனல் இதன் மார்க்கெட்டின் மதிப்பு ரூ. 8-62 ஆக வீழ்ச்சியடைந்துள்ளது பி. கே. கனேரியா என்பவர், அஸ்ஸாமில் நடத்தும் ஆனந்தா' டீ எஸ்டேட்டின் ஒரு பங்கின் மதிப்பு ரூ. 10 அதன் மார்க்கெட் மதிப்பு ரூ 6 ஆக வீழ்ச்சியடைந்துள்ளது.

பங்கு மதிப்புகள் வீழச்சியடைந்ததுடன் லாபப் பங்கீடும் வீழ்ச்சியடைந்துள்ளதாகவும் அவர்களது வரவு செலவுக் கணக்குகள் கூறுகின்றன. ரூ 10 மதிப்புள்ள பங்கிற்கு 25 காசு, 50 காசு, அதிகம் போனல், ஒரு ரூபாய்க்குமேல் இல்லை. பல ஆண்டுகளில் லாபப் பங்கீடு கொடுக்க முடியாத நிலை ஏற்பட்டது என்றும் அந்த வரவு செலவுக் கணக்கில் அறிவிக்கப்பட்டுள்ளது. இவை முதலாளிகள் கணக்கு.

நிலைமை இவ்வாறு இருந்தும் தொழிலாளிகட்கு அங்கெல்லாம் கிடைக்கும் சம்பளம் ரூ. 4க்கு குறைவில்லை அத்துடன் ஏனைய பல சட்டபூர்வமான உரிமைகளும் உண்டு.

### ஆனல் தென் இந்திய தோட்ட முதலாளிகளின் நிலைமை என்ன?

பாலவனூர் டீ எஸ்டேட்டின் ஒரு பங்கு மதிப்பு ரூ. 10 இதன் மதிப்பு இன்று மார்க்கெட்டில் 14 ரூ. 60 காசாக உயாந்துள்ளது. அதாவது நல்ல லாபம் சம்பாதிக்கிறது இந்த டீ தோட்டம் என்று பொருள்.

லாபப் பங்கீடாக இந்த எஸ்டேட்டில், ரூ. 10க்கு ஆண்டுதோறும் 1 ரூ 60 காசு அளிக்கப்படுகிறது. அதாவது 16 சதவீதம் லாபம்.

16 லட்ச ரூபாய் மூலதனம் போட்டுள்ள இந்தக் கம்பெனியின் சொத்து மதிப்பு இன்று 34 லட்சம் தேய்மான நிதி, ரிசர்வ் நிதி என்று வேறு 20 லட்சம் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள்.

**நான்சச் டீ** என்று ஒரு தேயிலைத் தோட்டக் கம்பெனி உண்டு. இதன் பங்கு மதிப்பு ரூ. 10. ஆனல் இன்று மார்க்கெட்டில் 17 ரூபாய்க்கு விற்கப்படுகிறது இந்த ரூ 10க்கு லாபப் பங்கீடாக ஆண்டுதோறும் 1 75 காசு தருகிறார்கள் அதாவது 17½ சதவிகித லாபம். ரூ. 32 லட்சம மூலதனத்தில் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கம்பெனி, 2 கோடியே 75 லட்சம் சொத்து மதிப்புள்ளதாக பெருத்துள்ளது.

**பார்க் சைட்** என்ற மற்றொரு டீ தோட்டக் கம்பெனியின் பங்கு மதிப்பு ரூ 10. இது மார்க்கெட்டில் இன்று 32க்கு விற்கப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டும் லாபப் பங்கீடாக ரூ தரப்படுகிறது 30 சதவிகிதம் லாபம். பயங்கரமான அளவு லாபம். 15 லட்ச ரூபாய் மூலதனத்தில் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கம்பெனி சொத்தின் மதிப்பு (ஆஸ்தி) ரூ. 44 லட்சம். இதல்லாமல் தேய்மான நிதியாகவும், ரிசர்வ் நிதியாகவும ரூ, 33 லட்சம் உள்ளது.

**பீர்மேடு எஸ்டேட்டை** எடுத்துக் கொள்வோம், இதன் பங்கின் மதிப்பு ரூ 10. இது மார்க்கெட்டில் ரூ 12-60க்கு விற்கப்படுகிறது லாபப் பங்கீடு 11 சதவிகிதத்திற்குக் குறைவில்லை. 23லட்சம் மூலதனம் உள்ள இந்தக் கம்பெனியின் சொத்தின் மதிப்பு ரூ 98 லட்சம் இதுவல்லாமல் ரூ. 81லட்சம் தேய்மானரிசர்வ்நிதியாகஒதுக்கிவைக்கப்பட்டுள்ளது.

**யுனைடெட் நீலகிரி** என்பது மற்றொரு தேயிலைத் தோட்டம் இதன் ஒரு பங்கின் மதிப்பு ரூ. 10. ஆனல் இது பங்கு மார்க்கெட்டில் ரூ 18-65 காசுக்கு விற்கப்படுகிறது 1971ல் லாபப் பங்கீடாக கொடுத்தது ரூ 1-75 காசு. அதாவது 17½சதவிகித லாபம். ரூ 33 லட்சம் மூலதனத்தில் நடக்கும் இந்த தோட்டத்தின்இன்றையசொத்தின் மதிப்பு85லட்சம், இதற்கு தேய்மான நிதி, ரிசர்வ் நிதி என்று ரூ 78 லட்சம் வேறு உள்ளது.

**ஸ்டேன்ஸ் அமால்கமேஷன்ஸ்** என்ற மற்றொரு தேயிலை எஸ்டேட்டை எடுத்துக் கொள்வோம். இதன் பங்கின் மதிப்பு ரூ 10. ஆனல் மார்க்கெட்டில் ரூ. 15க்கு விற்கப்படுகிறது. சராசரி 12½ சதவீதம லாபப்பங்கீடு ஒவ்வொரு ஆண்டிலும் கொடுக்கப்படுகிறது. ரூ 15 லட்சம் மூலதனத்தில் ஆரம்பிக்கப்பட்ட இந்தக் கம்பெனி இன்று 46 லட்சம் ஆஸ்தியுடையதாக இருக்கிறது இது வல்லாது ரூ. 37 லட்சம் தேய்மானம், ரிசர்வ் நிதியாக உள்ளது.

**இறுதியாக பெரியகாரமலை** என்பது மற்றொரு தேயிலை எஸ்டேட். இதன் ஒரு பங்கின் மதிப்பு ரூ. 2, ஆனல் இது மார்க்கெட்டில் 2-95க்கு விற்கிறது, 15 சதவீதத்திற்கு குறையாமல் லாபப்பங்கீடு கொடுத்து வருகிறார்கள். ரூ. 70 லட்சம் மூலதனத்தில் நடக்கும இந்தக் கம்பெனியின் சொதது மதிப்பு (ஆஸ்தி) ஒருகோடியே 74 லட்சம். இதுவல்லாது தேய்மான நிதியாகவும் ரிசர்வ் நிதியாகவும் ரூ. 1கோடியே 42 லட்சம் ஒதுக்கி வைத்துள்ளார்கள்.

(5-ஆம் பக்கம் பார்க்க)

## பாண்டியன் போக்குவரத்து தொழிலாளர் சங்கம் உதயம்

மதுரை ஜூன் 18— பாண்டியன் போக்குவரத்து தொழிலாளர் சங்கப் பேரவைக் கூட்டம் கடந்த 10—6—72 இரவில் இங்கு நடந்தது.

நிர்வாகத்தின் அடக்கு முறைகளை எதிர்த்தும், தினக்கூலி தொழிலாளர்களை நிரந்தரமாக்கவும், சர்வீஸ் நஷ்டஈடு பற்றி நிர்வாகம் வாய் மூடி மௌனியாக இருப்பதை எதிர்த்தும்,பிராவிடெண்ட் பண்டு கணக்குகள் தொழிலாளர்களுக்கு கிடைக்கச் செய்யவும், பழைய பத்தாம் பசலி காலத்தில் கொடுத்து வந்த பேட்டாவைமாற்றிஅமைக்கவும் தொழிலாளர்களை அணிதிரட்டி இயக்கத்தை நடத்துவது என்று முடிவு செய்யப்பட்டது.

சங்கத்தைப் பதிவு செய்வது என்றும், சங்கத்தைப் போராடும் ஸ்தாபனமான இந்திய தொழிற்சங்க மையத்துடன் (சி ஐ.டி.யூ.) இணைப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது. சங்கத்திற்கு தோழர் ஏ. பால சுப்ரமணியம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் மற்றும் தோழர்கள்;

ஆர். சி கோவிந்தராஜ்
ஏ. வி. ராஜூ
எஸ். ஏ. ரஜாக்
ஆகியோர் துணைத்தலைவர்களாகவும்

தோழர்
எஸ் மன்னர்சாமி
செயலாளராகவும்

தோழர்கள்
ஆர். முத்துகிருஷ்ணன்
பி. மணி
ஆர். நாருயணசாமி
ஆகியோர் துணை செயலாளராகவும்

தோழர்
இ. சண்முகபாண்டியன்
பொருளாளராகவும்

மற்றும் 30 நிர்வாகக்குழு அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## வருந்துகிறோம்

ஈரோடு, ஜூன். 12— ஈரோடு தாலுகா சுருட்டு தொழிலாளர் சங்க தலைவரும், மார்க்கிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினருமான தோழர் பி. நாச்சிமுத்து எதிர்பாராத விதமாக மாரடைப்பால் திடீரென்று கடந்த 9—6—72 வெள்ளி நடுபகல் 12 மணியளவில் இயற்கை எய்தினார்.

அன்னாரின்மறைவுசெய்தி கேட்டு ஏராளமான தொழிலாளத்தோழர்கள் தங்கள் பணிகளையும், தொழில்களையும் அப்படியே விட்டுவிட்டு மறைந்த தலைவருக்கு அஞ்சலி செய்தனர். ஏராளமான மலர் மாலைகள் அன்னாரின் பூத உடலில் அணிவிக்கப்பட்டன.

இடுகாட்டில் திரு. மு சின்னசாமி எம். எல். ஏ. தலைமையில் இரங்கல் கூட்டம் நடைபெற்றது.

மறைந்த தலைவரின் சிறப்பியல்புகளை விவரித்து மா. சுப்பரமணியம் எம் எல்:ஏ. ப. ச. விசுவநாதன்(நகர திமுக செயலாளர்), நாகப்பன்(வலது கம்யூனிஸ்ட்), கே. எஸ். நாச்சிமுத்து(வலது கம்யூனிஸ்ட்), என். வெங்கடாசலம்(மார்க்சிஸ்ட் கம்யூ) மெயில் சின்னப்பன், காசிபாளையம் ஊராட்சி மன்ற தலைவர் தியாகி செல்லையா (இ. காங்),ராமசாமி(சிண்டிகேட்), இ. ஏ. மாதர்சா (நகர்மன்ற உறுப்பினர்), செ. அரங்கராசன் (நகர்மன்ற உறுப்பினர்) மற்றும் அனைத்துக் கட்சியினரும் பேசினர்.

## லிந்தகோட்டையில் பொதுக்கூட்டம்

வேடசந்தூர், ஜூன். 11— ஜூன் 8-ம தேதி தோழர் ஆர். சுப்புராமன் தலைமையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டுக் கட்சி பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் மதுரை நன்மாறன் எம். மாரிமுத்து, சாரங்கபாணி பேசினா. மணவாளன் குழுவினர் இசை நிகழ்ச்சியும் நடைபெற்றது.

தோழர் வி. மலைக்கொழுந்தாபிள்ளை தலைமையில் ஜூன் 9-ம்தேதி பொதுக் கூம்டட் நடைபெற்றது.

## கோத்தாரி சர்க்கரை ஆலையில் தொழிலாளர்கள் கோவணப் போராட்டம்

காட்டூர், ஜூன். 12— கோத்தாரி சர்க்கரை ஆலை நிர்வாகம் பெருவாரியான தொழிலாளர்களின் ஆதரவு பெற்ற சி ஐ டி யூ சங்கத்தின் கோரிக்லகயை புறக்கணித்துள்ளது. எதேச்சதிகாரப் போக்கில் தொழிலாளர்களின் ஒற்றுமையை குலைக்க முற்பட்டுள்ளது. ஆகவே சில தொழிலாளர்களுக்கு சீருடை வழங்கி, சிலருக்கு சீருடை வழங்கவில்லை. குறிப்பாக சிஐடியூ சங்க தொழிலாளர்களுக்கு வழங்கப்படவில்லை.

இதனல் தொழிலாளர்கள கொதிப்பு அடைந்தனர். சங்க நிர்வாகிகளான மணக்கால் ஜெயராமன், லூர்துசாமி மற்றும் பலர் நிாவாகத்திடம் அனைவருக்கும் சீருடை வழங்க கோரினர். நிர்வாகம் தர மறுத்தது. இவ்வாறு எல்லாத் தொழிலாளர்களும் கடந்த ஜூன் முதல் கோவணம் கட்டிக்கொண்டு வேலை செய்கிறார்கள் மேலும் காலி ஸ்தானங்களை பூர்த்தி செய்வதில் காலதாமதம் செய்வதால் ''கருப்பு பேட்ஜ்'' அணிந்து தங்களது அதிருப்தியை தெரிவிக்கிறார்கள்,

கோரிக்கைகளை அடைய போராடுவதை தவிர வேறு வழியில்லை என்பதைதொழிலாளர்கள் உணர்ந்து போர் குணம் உள்ள சி ஐ டி யூ விற்கு ஆதரவு தருகிறார்கள். சீசன் ஆரம்பித்தவுடன் சீசனல் தொழிலாளர்களுக்கு சீருடை வாங்க போராட்டம் நடைபெரும் என்று சி ஐ டி யூ அறைகூவல் விட்டுள்ளது,

## கீழக்கரையில் உமாநாத்

20—6—72 செவ்வாய் இரவு 7 மணிக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம்

தலைவர்: தோழர் முருகையா

பேச்சாளர்கள்:

தோழர்கள்:

**ஆர். உமாநாத்**

பி. எஸ். துளசிராமன்

மற்றும் பலர்

## பொதுக்கூட்டம்

சின்னசேலம், ஜூன். 13— மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் மே மூன்றுவது வாரத்தில் இங்குள்ள சிவாஜி மேடையில் பொதுக் கூட்டம் நடந்தது. தோழர் எம். கோவிந்தன் தலைமை வகித்தார். தோழர் எஸ். என். கிருஷ்ணசாமி மற்றும் பலர் பேசினர்.

கடலூர் சிறையில் உள்ள மேற்குவங்க அரசியல்கைதிகளை திரும்ப அனுப்பக் கோரியும், சின்ன சேலத்தில் குடிநீர்ப் பஞ்சத்தைப் போக்க குழாய்கள அமைக்கக்கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## சிதம்பரம் பால் வழங்கும் சிப்பந்திகள் போராட்டம்

சிதம்பரம், ஜூன். 13— ஊதிய உயர்வு கோரி சிதம்பரம் கூட்டுறவு பால் வழங்கும் யூனியன் சிப்பந்திகள் ஜெனரல் ஒர்கர்ஸ் யூனியன் தலைமையில் போராட்டத்தில் இறங்க முடிவு செய்துள்ளனர்.

இங்கு பணிபுரியும் வெண்டாகள், மேற்பார்வையாளர்கள், எலக்ட்ரீசியன், பாய்லர்மேன், வேன் டிரைவர், வாட்சுமேன் போன்றவர்களுக்கு ரூ 52 லிருந்து ரூ. 77 வரைதான் சம்பளம் தரப்படுகிறது.

இச் சம்பளம் தங்களது குறைந்தபட்ச வாழ்க்கையைக் கூட நடத்தப் போதாது என்று பலமுறை கூறியும நிர்வாகம் செவி மடுக்கவில்லை.

எனவே கோரிக்கையை நிறைவேற்றக் கோரி முதல் நடவடிக்லகயாக நிறுவனத் தலைவர் வீட்டின் முன்பு உண்ணுவிரதம் இருகக முடிவு செய்துள்ளனர்.

(8 - ஆம் பக்கம் தொடர்ச்சி)

இந்தத் தோட்டங்களை பெரும்பாலும், சி, டி கோததாரி, ஜே. தாமஸ், சிவராமகிருஷ்ணய்யர், ஏ. சி. கே, கிருஷ்ணசாமி போன்ற தோட்ட முதலாளிகள் நடத்துகின்றனர்.

வடநாட்டு முதலாளிகளை விட இவர்கள் அதிக லாபம் சம்பாதிக்கிறார்கள என்பதை மேற்கூறிய விவரங்கள் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றன இந்தக் கணக்குகளெல்லாம் இத் தேயிலைத் தோட்ட முதலாளிகளின் வரவு செலவு கணக்குகளாகும். இதே முதலாளிகள் நடத்தும் ஏட்டில் வெளியாகியுள்ளது. டீ தோட்டங்களுடன், பலரப்பர் தோட்டங்களும்நடத்துகிறார்கள். அங்கும் இது போல் லாபம் சம்பாதிக்கிறார்கள,

ஊருவிட்டு நாடுவிட்டு உழைத்து வாழ
உடைமையற்ற கூட்டத்தா மலையைத்தேடி
ஏறுகின்ற மலைப்பாதை ஏற்றம் தன்னில்
ஏழைகளின் இன்னல்களைக் கூறுகின்றேன்

என்று தோட்டத் தொழிலாளர் வாழ்க்கையினை நேரில் கண்டு அனுபவித்த தோழர் சி, தங்கத்துரை என்பவர் கீழ்வருமாறு முடிக்கிறார்,

வருடக் கூலியென்பதால் கொடுக்கல் வாங்கல்
வகையெதுவும் தெரியாது அதனைக் கோட்டால்
ஒரு வருடம் முடிந்த பின்பும் சொல்வதில்லை
உதைமிதியும அடியுமுண்டு கேட்பாரிலலை
வருடத்தின முடிவில் வாய்ச் சொல்லால்
சொல்வார்

வரவுயில்லை கடனென்பார் வழிசொல் என்பார் -
தொழிலாளர் உழைப்பைச் சுரண்டிக் கொள்ளையும் அடிக்கும முதலாளிகள் தரும் பதில் இது.

— கே. எம்.

# கண்ணோட்டம்

## கொஞ்சமோ இவர் ஊழல்கள்!

## ஒரு கோடி என்ருல் அவை மிகையாமோ?

மறுபடியும் மறுபடியும் ஊழல் பிசாசு சதங்கை கட்டி ஆடத்தொடங்கிவிட்டது ஒரு ஊழலைபபற்றி அறிந்துகொள்ளுமுன்னதாகவே, ஓராயிரம் ஊழல்கள சந்திக்கு வந்துவிடுகின்றன. பழையபடி அதுதானு என்று கேட்கலாம். ஆமாம். பழைய ஊழல்தான்- அதாவது;

போனவருடம் டில்லி ஸ்டேட் பேங்கியிலே தொலைபேசியில் இநதிரா காந்தியின் குரல்போல ஒரு கீச்சுக்குரலைக் கேட்ட டில்லி ஸ்டேட்பேங்க் காஷியா மல்ஹோத்ரா சர்வதேச ப்ராடு நகர்வாலாவிடம்... கையெழுத்து, கால் எழுத்து, தலையெழுத்து எதுவும் வாஙகாமலேயே...... போனில் பேசியவர் இந்திராகாந்திதான் எனறு கருதி... 60 லட்சம் ரூபாய்க்கு கட்டுக்கட்டாகப் பச்சை நோட்டுக்களை எடுத்துக்கொடுத்த விவகாரமும்—அந்த நகர்வாலா நகாந்து தப்பும் முன்னதாகவே, டில்லி போலீசார் அவரைப் பிடித்து வழக்குப் போட்ட விவகாரமும்...பாட்டிக்கொண்ட நகர்வாலா, தான் இந்திரா காந்திக்கு ரொமப ரொமப வேண்டியவன் என்றும் அவரது நமபிக்கைக்குரியவனென்றும், அழுதழுதுசொன்னவிவகாரமும்... இந்திராகாந்தியை நோக்கி "மாதாஜி, மாதாஜி"— என்னைக் காப்பாற்றமாட்டாயா?" என்று ஓலமிட்ட விவகாரமும்...அப்படியும் தண்டிக்கப்பட்டபிறகு அந்த ஆத்திரகதில், "உங்களுடைய குட்டுகள் அத்தனையுமசந்திககு இழுப்பேன்" என்று உரத்த குரலில் திட்டிப்பேசிய விவகாரமும்......அப்புறம் சிறைக்குள் இருக்குமபோதே எப்படியோ செத்துப்போனதாகச் செய்தி வந்த விவகாரமும்...இந்த வழக்கிலே துப்புத்துலக்குவதில் ஈடுபட்ட போலீஸ் அதிகாரி காசியப் அவாகள், கார் விபத்தில் செத்துப்போன விவகாரமும் ... அவரது உடலை பிரதேபரிசோதனை செய்ய வேண்டாமென்றும் சிலர் கேட்டுக்கொண்டு எடுத்துப் போய் எரித்து விட்டதாகவும அந்த உடலை எடுத்துக் கொண்டு போனவர்கள் காசியப்பின் உறவினர்கள் கூட அல்ல என்ற விவகாரமும்... இவ்வாறு இன்னும் எவ்வளவோ குட்டுகளை உடைக்க வேண்டிய நகர்வாலாவும் குற்றங்களைத் துலக்கவேண்டிய சி ஐ டி இன்ஸ்பெகடர் காசியபபும் செத்துப்போன பிறகு......ஊழலகளைப் புரிந்தவர்களும், ஊழல்களைத் தெரிந்தவர்களும்— அந்தக் காஷியர் மல்ஹோத்ராவும் இந்திரா காந்தியும்தான் என்ற விவகாரமும்......இவர்களோ புலிக்குப் புதர் துணை, புதருக்குப் புலி துணை என்றவாறு வாய்மூடி மவுனிகளாக இருக்கின்ற விவகாரமும்... இவையெல்லாம் சென்ற பார்லிமெண்டுக் கூட்டத்தில் அடியும் உதையும்பட்டு ஊரு உலகமெல்லாம் சிரித்த விவகாரமும் நாட்டு மக்கள் நன்கறிந்த விவகாரந்தான்.

அந்த விவகாரத்தை அறிந்து கொள்ளு முன்பே அடுத்த விவகாரம் மூகதை முட்டிக் கொண்டிருக்கிறது. அரயசில் கட்சிகளுக்கு கம்பெனிகள் நன்கொடை வழங்கக கூடாது என்று சட்டம் இருக்கும்போது, அந்தச் சட்டத்தையும் மீறி...... மேற்கு வங்கத் தேர்தலின் போது ஆர்.பி. கோயங்கா என்ற பெருமுதலாளி, காங்கிரஸ் கட்சிக்காக இந்திரா படம் போட்ட ரூ 5 லட்சம் மதிப்புள்ள லட்சக்கணக்கான போஸ்டர்களை வெளியிட்டு உதவிய விவகாரமும் பார்லிமெண்டிலே ஆதார பூர்வமாக அமபலப் படுத்தப்பட்ட விவகாரத்தையும் நாட்டுமக்கள் அறிவார்கள்

இந்த விவகாரம் குறித்து இந்திரா சர்க்கார் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு போய் விவாதித்து, இதை விசாரிக்க ஒரு குழுவை நியமிக்கவேண்டுமென்று எல்லா எதிர்க்கட்சிகளும் வற்புறுத்திய விவகாரத்தையும்...... விசாரிக்கத் தேவையில்லையென்று ஆளும் கட்சி மறுத்து விட்டதின் பேரில், அனைத்துகட்சிகளும் வெளிநடப்புச் செய்த விவகாரத்தையும்...... அந்த வெளிநடப்புச் செய்த கட்சிகளுடன் வலது கம்யூனிஸ்ட் கட்சியும் சேராமல், "இந்திரா காந்தி பெரியம்மா! எது செய்தாலும் சரியம்மா!"—என்று கல்லுப்பிள்ளையார் மாதிரி சபையிலே பிசின்போட்டு உட்கார்ந்து கொண்டிருந்த மானக்கேடான விவகாரத்தையும் நாட்டு மக்கள் அனைவரும் அறிந்திருப்பார்கள்.

டில்லி ஊழல் விவகாரம்தான் இப்படி இருக்கிறதென்ருல், தமிழ்நாட்டிலே இந்திரா காங்கிரஸ் தலைவர் ஏ. பி. சி. வீரபாகுவின் ஊழல் விவகாரமும் பெரிதாகி நாறிக்கொண்டிருக்கிறது.

இந்திரா காங்கிரசைச் சேர்ந்த பார்லிமெண்டு உறுப்பினர் இராதாகிருஷ்ணன், டாக்டர் சௌரிராஜன் மற்றும் பல ஊழியர்கள், ஏ. பி. சி. யின் ஊழல்களைப் பற்றி ஒரு மகஜரையே கொடுத்தார்களாம். யாரிடம் கொடுத்தார்கள் தெரியுமா? மாநிலத் தலைவரின் ஊழலை விசாரிக்கும்படி, மத்திய ஊழல் தலைவி இந்திரா காந்திக்கு மகஜர் கொடுத்தார்களாம்!

இந்த ஏ. பி. சி. யின் ஊழல் பற்றி அந்த மகஜரில் என்ன குறிப்பிட்டிருக்கிருர்கள் தெரியுமா?

எத்தனையோ வேலைகளில் புகுந்து, அறுபத்து நாலு திருவிளையாடல்களையும் புரிந்து, எத்தனையோ லட்சம் ரூபாய்களை ஏப்பம் விட்டுவிட்டார் என்று சொல்லுகிருர்கள்.

மகாலெட்சுமி இண்டஸ்ட்ரீஸ் என்று தூத்துக்குடியில் ஒரு தொழிற்சாலையையும் திருநெல்வேலியில் அதன் கிளையையும் ஏற்படுத்திஞராம். அதில் அறுவை சிகிச்சைக் கருவிகள் உற்பத்தி செய்யப் போவதாகச் சொல்லி எவர்சில்வர் தகடுகளுக்கு 16 டன் கோட்டா வாங்கிஞராம். கல்கத்தா கம்பெனி இந்தத் தகடுகளை ஒரு டன் ரூ. 7000 வீதம் விற்பனை செய்ததாம்!

ஆனுல், இந்தத் தகடுகளைக்கொண்டு அறுவை சிகிச்சைக் கருவிகள் எதுவும் செய்யவில்லையாம்! திருநெல்வேலிக் கிளைக்கே வரவில்லையாம்......

அப்படியானுல் இறக்குமதி ஆன அந்த எவர்சில்வர் தகடுகள் என்னவாயிற்று?

டன் ரூ. 7000க்கு வாங்கிய தகடுகளை, டன் 36,000 ரூபாய்க்கு பம்பாய் ஸ்டோருக்கு விற்றுவிட்டாராம்! அதாவது டன்னுக்கு 29 ஆயிரம் ரூபாய் ஆதாயம்!...16 டன்னுக்கு ரூ. 4 லட்சத்து 93 ஆயிரம் ரூபாய் அதிககொள்ளை;

ஏ. பி. சி யின் இந்த பிசினசுக்கு முன்ஞள் எம். பி கமலசாமி உள்ஆளாம்! அவரோ கள்ளநோட்டு வழக்கிலும், இறக்குமதி, லைசென்சு துஷ்பிரயோக வழக்குகளிலும் மாட்டிக்கொண்டிருக்கிருராம். எப்பேர்ப்பட்ட கூட்டாளி பார்த்தீர்களா!...ஜாடிக்கேற்ற மூடி!......

நவீன அரிசி மில்லுக்கு பாய்லர் வாங்கிய வகையில் ரூ. 2 லட்சம் ஏப்பம் போட்டாராம், ஏ. பி. சி. விவகாரம் அது மட்டுமா?

இவர் ரசாயன உர சொஸைட்டிக்கு டென்மார்க்கிலிருந்து 40 ஆயிரம மூட்டை உரம், மூட்டைக்கு 42 ரூபாய் விலை வைத்து இறக்குமதிசெய்தாராம்! மேலதிகாரிகளைக் கையில் போட்டுக்கொண்டு, 10 ஆயிரம் மூட்டை உரம பழுதாகிவிட்டதாக கணக்கு எழுதும்படி கணக்குப்பண்ணி விட்டாராம்! எல்லா மூட்டைகளையும் ரூ. 82 மேனிக்கு—அதாவது மேற்கொண்டு ரூ. 50 விலை ஏற்றி...அத்தனையும் விற்று காசாக்கிவிட்டாராம்! இந்த வகையிலே ஏ. பி. சி யின் ஜிப்பா பைகளுள் ரூ 20 லட்சம் புதைந்து விட்டதாம்! பழுதான அந்த 10 ஆயிரம் மூட்டை விற்ற கணக்குதனியாக அபேஸ் ஆனதாம்!... அது மட்டுமா விவகாரம்?

சவுத் இந்தியா பேங்கின் திருநெல்வேலிக் கிளைத் தலைவராக இருந்து...... செப்புத் தகடு பெர்மிட் வாங்கி, 40 டன் செப்புத் தகடு இறக்குமதி செய்து...... அதை 5 மடங்கு விலைக்கு விற்று விட்டாராம்!......

கூட்டுறவு தொழிற்பேட்டைத் தலைவராக இருந்த போது, அதற்குக் கட்டிடம் கட்டுவதற்கு இடம் வாங்கிய வகையில், ஒரு கிரவுண்டு நிலம் ரூ 300க்குக் கிடைக்கும் போது, இவர் தனது மனைவியின் நிலத்தை கிரவுண்டு ரூ. 1200 மேனிக்கு வாங்கிஞராம்!...எப்படி விவகாரம்?...

இதற்குக் கட்டிடம் கட்ட வாங்கிய இயந்திரங்களை பலமடங்கு அதிக விலைக்கு விற்றுவிட்டு, அந்தப் பணத்தையும் ஸ்வாகா செய்துவிட்டாராம்!......அதுமட்டுமா விவகாரம்?

மீனவர்களுக்கு அரசு ஒதுக்கிய படகுகளில், மீனவரல்லாத செல்வராஜ் என்பவர் பேரில் 4 படகுகளை ஒதுக்கும்படி செய்து, அவற்றின் வருமானத்தை தமது குமாரர்கள் மேய்வதற்கு வழிசெய்து கொண்டாராம்! பேங்கியின் தலைவர் என்ற முறையில், அந்த செல்வராஜ் என்பவர் படகு வாங்கிக்கொள்ள நாலரை லட்சமரூபாய் கடன் தந்தாராம்! எபபடி விவகாரம்? ......

ரோச் விக்டோரியாவிடம் ரூ. 1 லட்சத்துக்கு இன்னெருவர் பெயரில் ஏலமெடுத்துக் கொண்ட இயந்திரத்தை, இப்போது அரசாங்கத்துக்கே ரூ 12 லட்சத்துக்கு விற்க, மேலிடத்துக்கு வலைவீசி வருகிருராம்!... பார்த்தீர்களா, விவகாரம் போகிற போக்கை!

இந்திரா காந்தி விவகாரம் போலவே, ஏ. பி. சி. விவகாரமும் இப்படி இருக்கிறது. இன்னும் கிண்டிக் கொண்டேயிருந்தால், பார்பர்ஷாப் குப்பைக் குழியைக் கிண்டுவது போலத்தான் இருக்கும். எனவே, விவகாரத்தை இத்துடன் முடித்துக் கொள்கிறோம்.

—ஐ. மா. பா.

# அலுமினிய கம்பெனி தொழிலாளர் மீது

# பழிவாங்குதலை நிறுத்துக

## மேட்டூர் சர்வகட்சிக்கூட்டத்தில் அறைகூவல்

மேட்டூர், ஜூன் 12—

மேட்டூர் பிரதேசத்தில் இயங்கி வரும் அரசியல் கட்சிகளான இந்திய தேசீய காங்கிரஸ், ஸ்தாபன காங்கிரஸ், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி, உழைப்பாளர் பொது நலக்கட்சி ஆகிய கட்சிகளின் பிரதிநிதிகளும், அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் (ஏ. ஐ டி. யூ. சி) ஹிந்து மஸ்தூர் சபா (எச். எம். எஸ்) தேசீய இந்தியத் தொழிற்சங்கங்களின் மையம் (சி யூ. டி. யூ) இந்திய தேசீய தொழிற்சங்க காங்கிரஸ் (ஐ. என். டி. யூ. சி) ஆகிய அகில இந்திய தொழிற்சங்க பிரதிநிதிகளும் இவைகளில் இணையாத தொழிற்சங்க பிரதிநிதிகளும் கொண்ட கூட்டம் ஸ்தல சட்டமன்ற உறுப்பினர் திரு எம். சுரேந்திரன் தலைமையில் 4—6—72-ல் கூடி அலுமினியம் தொழிற்சாலையில் தொடர்ந்து நடந்துவரும் அநீதியான காரியங்கள் குறித்து ஆலோசனை செய்தது. கூட்டத்தில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

அலுமினியம் தொழிற்சாலை நிர்வாகம் தொழிலாளர்கள் சுயமாக சங்கம் செயல்படுவதற்கு கூட அனுமதியாமல் இருந்ததையும், ஸ்தலத்தில் உள்ள ஸ்தல அரசியல் கட்சிகள், தொழிற்சங்கங்கள் ஒன்று சேர்ந்து "மால்கோ தொழிற்சங்க ஜனநாயக பாதுகாப்பு கமிட்டி" என்ற பெயரில் ஒரு குழுவை ஏற்படுத்தி சட்டமன்ற உறுப்பினர். திரு எம். சுரேந்திரன் அவர்களை உண்ணுவிரதமிருக்கும்படி செய்து, மேட்டூர் காணுத அளவு பெரும் கிளர்ச்சிகளையும் 29-4-72ல் பொது வேலை நிறுத்தம் ஹர்த்தால் என்ற அறிவிப்புகளையும் செய்த தன் விளைவாக "அலுமினியம் தொழிலாளர் முன்னேற்ற சங்கத்திற்கும்" தொழிற்சாலை நிர்வாகத்திற்கும் சென்னையில் தொழிலாளர் நல அமைச்சர் முன்னிலையில் ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது.

இந்த ஒப்பந்தம் முறையாக அமுல்படுத்தப்படாமல், அலுமனிய தொழிலாளர் முன்னேற்ற சங்கம 15-5-72ல் கண்டன வேலை நிறுத்தம்செய்வதாக அறிவித்திருந்தது. இது குறித்து 14-5-72ல் சென்னையில் மீண்டும் ஒரு உடன்பாடு காணப்பட்டது. இந்த வகையில் அலுமினியம தொழிலாளர் முன்னேற்ற சங்கத்தை நிர்வாகம் அங்கீகரித்து விட்டதால் "மால்கோ தொழிற் சங்க ஜனநாயக பாதுகாப்பு கமிட்டியின் வேலை முடிந்து விட்டதாக கருதி அது கலைக்கப்பட்டது.

### போலி ஒப்பந்தம்

26-4-72ல் ஏற்பட்ட ஒப்பந்தத்தில் உள்ள சில ஷரத்துக்களை அலுமினியம் தொழிலாளர் முன்னேற்ற சங்கம் பேசக்கூடாதென்று உயர்நீதி மன்றத்திலிருந்து தடையாணை பிறப்பிக்கப் பட்டிருப்பதையும், மேற்படி ஒப்பந்தத்தில் ஷரத்துக்களில் ஒன்ருன முதலிரண்டு ஷிப்ட் தொழிலாளர்களுக்கும் 45 நிமிடம் கேட்பாஸ் அளித்து ஓய்வு தரவேண்டுமென்ற ஷரத்துக்குவிரோதமாக பர்னஸ் செக்ஷன் தொழிலாளர்களின் வேலை நேரத்தில் மாறுதல் செய்திருப்பதையும் அதைத் தொடர்ந்து நடந்திருக்கிற சஸ்பெண்ட்கள், போலீஸ் தலையீடுகள் போன்ற அம்சங்களை யெல்லாம் கணக்கிலெடுத்துக்கொண்டுபார்க்கும்போது 26-4-72ல் ஏற்பட்ட ஒப்பந்தமும், 15-5-72ல் ஏற்பட்ட உடன்பாடும் போலியானதென்றும், பின்னுல் அவைகளை உடைப்பதற்கும் தொழிலாளர்களை பழி வாங்குவதற்கும் திட்டமிட்டு தொழிற்சாலை நிர்வாகம் மேற்படி ஒப்பந்தத்தையும், உடன்பாட்டையும் ஏற்றுக் கொண்டதென்பதும் தெளிவாகிறது.

### பாதுகாப்பு கமிட்டி

இந்த நிலையில் மீண்டும் அனைத்து கட்சிகளும் தொழிற் சங்கமும் அலுமினியம் கம்பெனி தொழிலாளர்களுக்கு உதவ வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்று இக்கூட்டம் கருதுகிறது. அதனுல் "மால்கோ தொழிலாளர்பாதுகாப்பு கமிட்டி" என்ற பெயரில் சட்டமன்ற உறுப்பினரைக் கன்வீனராகக் கொண்ட ஒரு குழு அமைப்பதென்று கூட்டம் முடிவு செய்கிறது

### நீதி கிட்டாவிடில் வேலை நிறுத்தம்

அலுமினியம் தொழிலாளர் முன்னேற்ற சங்கத்திற்கும், அலுமினியம் தொழிற்சாலை நிர்வாகத்திற்கும் 26-4-72-ல் தொழிலாளர் நல அமைச்சர் முன்னிலையில் ஏற்பட்ட ஒப்பந்த நோக்கத்திற்கும் 14-5-72ல் ஏற்பட்ட உடன்பாட்டின் கருத்திற்கும் விரோதமாக பர்னசில் வேலை செய்யும் தொழிலாளர்களில் 25 பேரின் வேலை நேரம் மாறுதல் செய்தும் இதன் தொடர்பாக 26-5-72 லும் அதன் பின்பும் சுமார் 40 தொழிலாளர்களை சஸ்பெண்ட் செய்திருப்பதும் தொழிற்சாலை நிர்வாகம் வேண்டுமென்றே திட்டமிட்டு தொழிலாளர்களைப் பழி வாங்கியிருப்பதாகவும் ஒப்பந்தத்தை ஏற்படுத்தித் தந்த தொழிலாளர் நல அமைச்சரையும், தொழிலாளர் நல அதிகாரியையும் அவமதிப்பதாகவும்—தொழிற்சாலை நிர்வாகத்தின் நடவடிக்கைகள் அமைந்திருப்பதாக இக்கூட்டம் கருதுகிறது.

அதனுல் பர்னஸ் தொழிலாளர்களின் வேலை நேர மாற்றத்தையும், தொழிலாளர்கள் மீது பிறப்பிக்கப்பட்டுள்ள சஸ்பென்ட் உத்திரவுகளை வாபஸ் பெற்றுக் கொண்டு, சஸ்பெண்ட் காலத்திற்கான சம்பளத்தை வழங்கி 18 5-72ல் தொழிற்சாலை இருந்த மாமூல் நிலையைத்தொடர்ந்து நிலை நிறுத்த 26—4—72 ஒப்பந்தத்தை கௌரவிக்கும்படியும், தொழிலாளர்கள் விரும்பிய சங்கத்தில் சேர்ந்து செயல்படும் உரிமையை அங்கீகரித்து தொழிலாளர் நல்லுறவையும் சமாதானத்தையும் பேணிகாக்கும்படியும் மால்கோ நிர்வாகத்தை இக்கூட்டம் கேட்டுக்கொள்வதோடு அரசும் இது விஷயத்தில் உறுதியாக நின்று தொழிலாளர்களுக்கு நீதி கிடைப்பதற்கு உதவ வேண்டுமென்றும், இவைகள் 15—6—72க்குள் நிறைவேற்றப்படாவிடில் ஸ்தலத்தில் உள்ள தொழிலாளர்களை பொது வேலை நிறுத்தம் செய்யும்படியும் "மால்கோ தொழிலாளர் பாதுகாப்பு கமிட்டி" ஒரு நாள் நிச்சயப்படுத்தி கேட்டுக்கொள்ள வேண்டுமென்றும் இக்கூட்டம் முடிவு செய்கிறது.

### போலீஸ் தலையீட்டை நிறுத்துக

மேட்டூர் அலுமினியம் தொழிற்சாலையில் ஆயுதப் போலீசாரை வைத்திருப்பதும், அவர்கள் தொழிற்சாலை கேன்டீனில் உணவு கொள்வதும், தொழிலாளர்கள் வேலைக்கு கம்பெனிக்குள் செல்லும்போதும், வரும்போதும் தொழிற்சாலை வாசலில் அணிவகுத்து நிற்பதும், தொழிலாளர்களை சுதந்திரமாக செயல்பட முடியாமல் அவர்களை பயமுறுத்தும் நடவடிக்கையாக இருக்கிறது.

திட்டவட்டமான அவசியம் ஏற்பட்டு நிர்வாக நீதிபதியின் முன்னிலையில் அவரின் முறையான உத்திரவில்லாமல் தொழிலாளர்கள் வேலை செய்யும் இடங்களில் போலீசார் பிரவேசிக்க கூடாதென்ற கோட்பாடுகளுக்கு விரோதமாக 26—5—72 ல் போலீசார் அலுமினியத் தொழிற்சாலைக்குள் புகுந்து தொழிலாளர்களை அடித்து பயமுறுத்தி 21 பேரை கைது செய்திருப்பது அப்பட்டமான அத்துமீறிய செயலென்றும், தொழிற்சாலை நிர்வாகத்தின் திட்டமிட்ட பழி வாங்கும் நடவடிக்கைகளுக்கு உதவும்படியான செயலென்றும், இதுபோன்ற போலீசாரின் செயல்கள் அரசின் தொழிலாளர் நல கொள்கைகளுக்கு விரோதமான தென்றும், தொழிலாளர்கள் பலாத்காரத்தில் இறங்காதவரை, தொழிலாளர்களின் கிளர்ச்சிகளிலும் வேலை நிறுத்தங்களிலும் போலீசார் தலையிடமாட்டார்கள் என்ற அரசின் அறிவிப்புகளுக்கும் விரோதமானதென்றும் எடுத்துக் காட்டி மேற்படி போலீசின் நடவடிக்கைகளை இக் கூட்டம் வன்மையாக கண்டிக்கிறது.

மேற்கொண்டு போலீசார் இதுபோன்ற நடவடிக்கைகளில் ஈடுபடாமல் பார்த்துக் கொள்ளவேண்டுமென்றும் அத்துமீறி செயல்பட்ட போலீசின் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றும் தவருன முறையில் 21 தொழிலாளர்களை கைதுசெய்து வழக்கு தொடுத்திருப்பதை வாபஸ் வாங்க வேண்டுமென்றும் அரசை இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

(8ம் பக்கத் தொடர்ச்சி)

அடக்குமுறைகளைக் கண்டித்தும், மேற்கு வங்கத்தில் இன்றைய அரசியல் நிலை குறித்தும், வலது கம்யூனிஸ்டுகள் நடத்திய நில மீட்சிப் போராட்டம்பற்றியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையில்- கேரளாவில் தோழர் ஏ. கே. கோபாலன் தலைமையில் நடந்து வரும் நீலமீட்சிப் போராட்ட நிலைமைகளைப் பற்றியும், இந்திரா அரசின் போலி முகமூடி எப்படிப் பட்டது என்பதைப் பற்றியும் விளக்கமாகப் பேசினர்.

#### இனும் விவசாயிகளுக்கு

# பாதுகாப்புத் தருக

## திருச்சி மாவட்ட விவசாயிகள் சங்க மாநாடு கோரிக்கை

புதுகோட்டை, ஜூன். 12—

திருச்சி மாவட்ட விவசாயிகள் சங்க மாநாடு புதுக்கோட்டையில் ஜூன் 4ல் நடந்தது 200 பிரதிநிதி தோழர்கள் கலந்துகொண்டனர். மாவட்ட வி ச துணைச்செயலாளர் எம் மாரியப்பன் தலைமை வகித்தார்.

மாநாட்டின் பந்தலுக்கு முன்பாக உழைப்பாளி வர்க்கச் செங்கொடியை வாழ்த்தொலிகள் முழங்க மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாவட்டக்கமிட்டி செயலாளர் தோழர் பி. ராமச்சந்திரன் ஏற்றிவைத்தார். பிரதிநிதிகளை வரவேற்று நமனசமுத்திரம் வட்டார வி ச தலைவர் ஆர். சின்னத்தம்பி சொற்பொழிவாற்றினர்.

தோழர் பி ராமச்சந்திரன் செங்கொடி இயக்க பாரம்பரியத்தையும் தியாக உணர்வையும், விவசாயிகளை ஸ்தாபன ரீதியில் திரட்டவேண்டிய அவசியம் குறித்தும் விரிவுரையாற்றினர்.

மாவட்ட வி. ச. செயலாளர் பெரி குமாரவேல்ஆண்டறிக்கை சமர்ப்பித்து விளக்கிப் பேசினர் செயலாளர் அறிக்கையின் மீது விவாதத்தை துவக்கி வைத்து திருச்சி தாலுகா வி. ச. பிரதிநிதி தோழர் கமலதாசன் பேசினுர். மற்றும் தோழர்கள் பி. ஏ. ஆனந்த், ஏ. அடைக்கலம், டாக்டர் ஜான் விவாதத்தில் பங்கு கொண்டு அறிக்கையினை செழுமைப்படுத்தினர். அது ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

மாநாட்டை வாழ்த்தி புதுக்கோட்டை நகர மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிச் செயலாளர் பி சண்முகம், நமனசமுத்திரம் தொழிற்சங்க செயலாளர் எஸ் சுப்பிரமணியம், காவேரிநகர் தொழிற்சங்க செயலாளர் சி கே. ரெங்கசாமி மாணவர் சங்கத் தலைவர் தோழர் பிச்சைமுத்து ஆகியோர் பேசினர்.

மாவட்ட விவசாய சங்க செயலாளர் பெரி. குமாரவேல் தீர்மானங்கள் சமர்ப்பித்தார் பலத்த கரகோஷத்திற்கிடையே ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

### இனும்தார் முயற்சிகளை தடுத்திடுக

அதன் விபரம் பின் வருமாறு:—

மார்ச் 6, 7ம் தேதிகளில் மாயவரத்தில் கூடிய தமிழ் நாடு விவசாய சங்க நிலச் சீர்திருத்த தீர்மானங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. புதுக்கோட்டைப் பகுதி இனும் விவசாயிகளுக்குச் சட்டம் 26/63-ம்,23/69-ம் வரப்பட்டுள்ள கிராமங்களில் இனும் ரயத்துகள்மேல் வாரம் கொடுக்கா திருப்பதைக் கண்ட இனும்தார்கள், கோர்ட்டு மூலமாக மேல் வாரம்பெற முயற்சித்துக் கொண்டிருப்பதைத்தடுத்து நிறுத்தக் கூடிய முறையில், தமிழக அரசு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். இனும் விவசாயிகளுக்குத்தனை வாரப்பாக்கி என்ற நிலையில்லாமல் நிபந்தனையின்றி ரத்துச் செய்ய வேண்டும். உயர்நீதி மன்றங்களில் ஸ்டே என்ற உத்திரவு பெற்று இனும்தார்கள் தப்பித்துக்கொள்ளவும், சட்டத்தின் நோக்கம் ஈடேராமல் செய்யவும் எடுக்கும் முயற்சிகளை தடுக்கும் நடவடிக்கையில், கோர்ட் கலையீடுகளை செட்டில்மெண்டு செய்யும்வரை தடுத்து நிறுத்தவும் வேண்டும்.

### மீண்டும் நிலம் தருக

மைனர் இனும நிலங்கள் என்ற பேரால் விடப்பட்டுள்ள 200க்கு மேற்பட்ட கிராமங்களை மேஜர் இனும் ஒழிப்பின் சட்டத்தின் கீழ் கொண்டு வந்து சாகுபடி செய்யும் விவசாயிகளுக்கு பட்டா உரிமை கிடைக்க செய்யவேண்டும், உயர்நீதிமன்ற ஸ்டே என்ற பேரால் சாகுபடி ரயத்துக்களிடம் உள்ள இருவாரப் பாத்தியதையை பறிக்க முன்சிப் கோர்ட்டுகளிலும், ரெவின்யூ கோர்ட்டுகளிலும், இனும்தார்கள் வழக்கு தொடர்ந்து மேல் வாரம் என்றபேரால் சட்ட விரோதமாக பெற்றிருக்கும் மேல்வாரங்களை திருப்பக் கொடுக்கவும் வகைசெய்திடவேண்டும். நிலச் சட்டங்கள் வந்தபின் இனும்தார்கள் பலாத்காரமாகவும், கோர்ட்டுகள் மூலமாகவும், வெளியேற்றப் பட்டிருக்கும் விவசாயிகளுக்கு மீண்டும் நிலம் கிடைக்க வழி செய்திடல் வேண்டும்.

### பஸ் வசதி செய்க

மேலும் சில்லரைத்தட்டுப் பாட்டினைப் போக்கக்கோரியும், ஆரம்ப ஆசிரியர்கள் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்தும், புதுக்கோட்டையில் தனிகல்விப் பயிற்சி கூடம் அமைக்கக்கோரியும், சொஸைட்டி, அரசாங்க கடன் வசூலுக்காக ஜப்தி நடவடிக்கை எடுப்பதைக் கண்டித்தும், புதுக்கோட்டையை தலைநகரமாகக் கொண்ட தனி மாவட்டம் அமைக்கக் கோரியும் புதுக்கோட்டை அண்டக்குளம், புதுக்கோட்டை—அரிமளம், புதுக்கோட்டை-ஆதனக்கோட்டை, ஆலங்குடி—அரிமளம், புதுக்கோட்டை — அன்னவாசல் டவுன் பஸ் வசதி ஏற்பாடு செய்யக் கோரியும், மூலங்குடியில் கோவில் தரிசு நிலத்தில் பருத்தி சாகுபடி செய்திருந்ததை அழித்து நாசப்படுத்திய திருமயம் தாசில்தாரது நடவடிக்கையைகண்டித்தும், உய்யக் கொண்டான் கால்வாயில் கலக்கும் திருச்சி எரிசாராய கழிவு நீரை அகற்ற நடவடிக்கை எடுத்துக்கொள்ள கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன

மாவட்ட விவசாயிகள் சங்க நிர்வாகிகளாக பின் கண்ட தோழர்கள் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பாப்பா உமாநாத்—தலைவர், எஸ் சுயம்பிரகாசம், கே. சின்னையா- உபதலைவர்கள், பெரி குமாரவேல் - செயலாளர், எம். மாரியப்பன், பி ஏ ஆனந்து-துணை செயலாளர்கள்.

### கமிட்டி உறுப்பினர்கள்

எஸ். சுப்பிரமணியம், பழ சுப்பையா, ஏ அடைக்கலம், கே. ஆரோக்கிய சாமி, ஆர். சின்னத்தம்பி, பி. கமலதாசன், ஆர். ஜெயராமன், எம். கோவிந்தசாமி, கே. வீராச்சாமி டி. சுயம்பிரகாசம், வி. நடேச உடையார். எஸ். வேலு, எஸ். முத்துசாமி, ஏ. எஸ். ஜான், எஸ். முத்தையா, இன்னுசி, மாரியப்பன்.

### ஊர்வலம்

தோழர் கே. சின்னையா தலைமையில் செந்தொண்டர்கள்பேரணி பொன்னமருவதியிலிருந்து சைக்கிள் மூலம் மாநாட்டு பந்தலை வந்தடைந்தது, புதுக்கோட்டை நகர மக்களிடையே உற்சாகத்தை ஏற்படுத்தியது.

### பொதுக்கூட்டம்

மாலை 5 மணிக்கு டவுன் ஹாலில் இருந்து தப்பு மேளங்கள் கொட்டு முழங்க, பிரதிநிதிகள் முன் செல்ல, சைக்கிள் படை பின்செல்ல, ஆயிரக்கணக்கான விவசாயிகள் செங்கொடியேந்தி விண்ணதிர கோஷமிட்டு, நகர முக்கிய வீதிகளின் வழியாக ஊர்வலம்சென்று திலகர்திடலில் மாநாட்டுப்பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தோழர் எம். மாரியப்பன் தலைமைவகித்தார். நிலச் சீர் திருத்த தீர்மானங்களை விளக்கியும், இனும் ஒழிப்பு சம்பந்தமான தீர்மானங்களை விளக்கியும் பேசினர்.

தீர்மானங்களை தோழர் பெரி-குமாரவேல் விளக்கி விரிவாகபேசினர். விவசாய மக்கள் ஒன்றுபட வேண்டிய அவசியத்தைபற்றியும் கூறினர்.

தோழர் பி. சண்முகம், சி. கே. ரெங்கசாமி, விவசாயிகள் கோரிக்கைகளை ஆதரித்துப் பேசினர். செம்பாட்டூர் தோழர் முத்து செங்கொடி இயக்கப்பாடல்கள் பாடினர். கடைசியாக தோழர் ஆர். உமாநாத் பேசுகையில், மத்தியமாநில அரசுகளின் தொழிலாளர் விவசாயிகள் விரோதக் கொள்கைகளைக் கண்டித்தும், வால்பாறை தோட்டத் தொழிலாளர்கள் மீது தமிழக அரசின் போலீஸ்

(5-ம் பக்கம் பார்க்க)

இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில்(13-முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர், ஆசிரியர்: கே. முத்தையா.